First Thousand.

VOL. XV]. NOVEMBER, 1906. REGISTERED.— M. 108 [No. 7.

லேசான காகிதப்பதிப்பு.
தனிப்பிரதி, 5½ அணா.
பழைய பிரதி, 6 „

சந்தாவிலை விவரம்.
ஒருவருஷத்துக்கு ரூ. 4
6 மாதத்துக்கு „ 2-2




அறிவைப் பரவச் செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப் பத்திரிகை.

**DEVOTED TO TRUTH AND KNOWLEDGE:**

அறிவுடையாரெல்லாமுடையா ரறிவிலா ரென்னுடைய ரேனுமிலர்.—திருக்குறள்.

**A HIGH THOUGHT REVIEW**
**TAMIL MONTHLY**
*Estd. May 1892.*

கற்க கசடறக் கற்பவை கற்றபின் நிற்க வதற்குத் தக.—திருக்குறள்.

ILLUSTRATING THE PRINCIPLES OF EDUCATION, PSYCHOLOGY, SOUL-CULTURE & ETHICS, ADAPTED FOR USE IN HOMES & SCHOOLS.

Hitch your wagon to a star—Emerson.

## CONTENTS.



## அடக்கம்



"Our Theism is the Purification of the Human Mind"—Emerson.

Thick Paper Edition for Patrons.] **PUBLISHED BY** [Minimum Subscription, Rs. 5;

**The Secretary, Diffusion of Knowledge Agency,** { 2, Sydogy Lane, PYCROFT'S ROAD. }

*Anandashrama, Triplicane, Madras.*

**For Satyananda of the Ananda Mission.**

Thin Paper Editon or the People.] *Copy-right.* [Subscription Price: Yearly Rs. 4.

*"Like a spider, like the earth, and like a living creature He produces the Universe."—Upanishad.*

## A PERSONAL STATEMENT.

To the Editor of the "Hindu" †

SIR,—Will you permit me space to make a brief personal statement for the information of such of my friends as are deeply affected by the persent catastrophe that has befallen me and the two little children along with so many others. I am one of those unfortunates who have lost their all by the unexpected failure of Arbuthnot & Co. I had not only invested all my savings with them but had also a current account in which I had put in all my ready cash. As is well-known, I have been enthusiastically giving myself up to Psychic Research for some years past, and quite recently I have been experimenting upon my life to know the truth of certain Higher Laws that govern the "Higher Life" the Initiate ever longs to attain and live up to. In this experiment I have been following the methods of 'Yoga' as traditionally taught from Guru to *Sishya*, but with an eye to comparing them with the results of investigations of modern scientific research, in the highest acceptance of the term. In this attempt I had, as it naturally comes to an earnest and persistent practitioner in the right path, to grasp and pursue the principle of Involution (as taught in *Laya Yoga*) to its farthest limit, which means passing through and beyond the portals of Death. Having discharged, as I thought, my worldly duties, I made a proper settlement on all those dependent upon me and resolved to venture into the realm of Death to see the Individual Will die and merge itself in the Divine Will. I went through the ordeal successfully enough from my point of view, with nothing worse than a severe shock and a great nervous disturbance which physically prostrated me (from an external point of view) and left me unable to go about for the past six weeks. While in meditation yet, I was roused by a young friend who first heard of the crash and was impatient to know the worst that has befallen me and the children, and I had to inform him that I have lost my all to the extent of nearly twenty thousands (a little less than more). The news spread fast and a number of friends came to sympathise with me and the children. It was a trying time for me to maintain my balance and protect my children from being disheartened and I am still busy guarding them from their having a mental shock, which in their present state will be disastrous to their health. Just at this juncture, a kind-hearted friend has sent me anonymously, of course, a Five Rupee note thoughtfully enclosed in a bit of paper with nothing more than the words "Sadanandam and Maduram for milk." Highly as I appreciate the motive that induced this kind-hearted friend to show the tender feeling of a mother towards the children, and thank him or her most sincerely for the same, I beg to inform him or her and others kindly disposed like him or her, that miserable as the outlook is and heartrending the situation, the children have all their physical wants well-supplied for the present by a small sum of Rs. 30 or so, which I had fortunately not remitted to the Bank as I intended. As all my physical energies were entirely absorbed in the pursuit of the one Truth I sought to look for and search, I was for a time "physically prostrate;" but I am rapidly getting over it and hope, by the Grace of God, to work for and obtain a living. Such of my friends as are in sympathy with me will greatly oblige me by helping me to find work rather than remitting sums to me, which, however much needed, I find it go against my grain to accept. I trust a "willing worker" may yet find something to do by which to earn a living. If, in the meanwhile, such of the well-to-do subscribers of the *Vivekachintamani* as are in arrears for a number of years, will kindly remit their arrears of subscription, it will be a great boon to a suffering but not yet a fallen man.

C. V. SWAMINATHAIYER.

Anandashrama, *October* 24.
Tripicane, Madras.

† Also appeared in the 'Madras Standard.'



## LETTERS OF SYMPATHY.

Rev. Dr. Miller. C. I. E. writes:—"...I need not say how sorry I am to learn that you are among the many sufferers from the disgraceful failure of Arbuthnot & Co. I have had the statement which you enclosed read to me and offer you my warm sympathy. I trust that you will soon succeed in finding some such occupation as you desire. I wish I could do anything to help you; but I fear that nothing of the kind is in my power especially in my present condition. I trust that your subscribers will be influenced by your appeal and that you may be able to continue the work which you feel called upon to do."

Mrs. J. Brander:—"...I will now renew my subscription and enclose Rs. 5 for the purpose. I hope you will obtain other subscribers also and that the magazine may become a good source of income."

Mr. H. Beauchamp, C. I. E., (Editor of the *Madras Mail*)... ..."Believe me, I reciprocate throughly your friendly feelings. I thank you very much for "Gleanings on the Way", which I shall study...I am very grieved to hear of your serious losses in Arbuthnot & Co."

Mr. T. Sadasivaiyer, (Chief-Justice, Travancore)—"...I hope the appreciation of staunch supporters in the *Nivrithimarga* has established the *Viveka Chintamani* on an unassailable basis..."

169

௳

*"Give me not, O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is, but give me, O God, that sublime belief, that seeing evil I yet have faith."*

"Seek Truth wherever you can find it," But, "Make your choice and stick to it till you reach the En

ஸத்யம்வத.—**Speak the Truth.**

**"Hitch your Wagon to a Star."** **"To Thine Own Self be True.**




*அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம்தத்ஸத்.]* ௳ [God is Love : Knowledge is Power: *Om.*

ஸத்யமேஜெயம்—**Satyameva Jayati.**

புத்தகம் 15.] 1906-ம்வருஷ நவம்பர்மீ. [சஞ்சிகை 7.

THE ARBUTHNOT CATASTROPHE.

# God, The Only Refuge To The Helpless.

## "திக்கற்றவர்க்குத் தெய்வமேதுணை."

### அர்பத்நட் கம்பெனி முழுகினதால் வந்த வில்லங்கம்.

"I am the father of the orphan and the husband of the widow"—Christ Jesus.

"Yoga is the only thing worth striving for"—Reflection of an Eminent Person, who has climbed up to the highest rung of the ladder in worldly life.

"A man animated by the old spirit of Hebrew bigotry, to which he had added the time-serving morality of a "man of the world," sceptical as to all sincerity, and contemptuous of all devotion to an unpopular cause."—Mrs Annie Besant's description of the then Master of the Rolls. (Substitute "Intellectual Sophistry" for "Hebrew bigotry" and the description will serve well to represent a type of character which at the present time and age has a dominating influence in the counsels of the Empire and of Society.)

*"அநந்யாச்சிந்தயந்தோமாம்யேஜநாப்பர்யுபாஸதே*
*தேஷாம்நித்யாபியுக்தாநாம்யோகக்ஷேமம்வஹாம்யஹம்."*—பகவத்கீதை.

"ஓம்புவனேசுவரியைநம:/ ஸ்ரீலோகநாயகி சரணம். ஜகத்ஜநநீ ஸத்குரோபாஹி." புவனங்களையெல்லாம் ஆளும் ஈசுவரியின்பொருட்டு நமஸ்காரம். எல்லா லோகங்களுக்கும் நாயகியாகிய அவள் ஸ்ரீபாதமே சரணம். ஜகத்துக்கெல்லாம் மாதாஸ்தானமாயிருக்கும் ஸத்குருமூர்த்தமான அந்த ஈசுவரி நம்மைக்காப்பாற்றட்டும். இந்த வார்த்தைகளும் சரணங்களும் உபசாரத்துக்குச் சொன்னவையல்ல. வெளிவேஷமுமல்ல. வீண்வார்த்தைகளுமல்ல. ஆனால் இவற்றின் கருத்தென்னவெனில்:—உலகத்தில் யாருக்கும் ஈசுவரியினுடைய கிருபையன்றியில் வேறு கதியொன்றுமில்லை என்பதாம். "திக்கற்றவர்க்குத் தெய்வமேதுணை"—அந்தத் தெய்வமும் தாய்ரூபமாகவிருந்து நம்மைப் பெற்றுவளர்த்துக் காப்பாற்றிக் கண்டித்தும் தண்டித்தும் திருத்தி நல்வழிக்குக் கொண்டுவந்து நற்கதியடையச் செய்கிறது. "அடிக்குமொருகை அணைக்குமொருகை" யென்று சொல்லுவதற்கிணங்க அடித்தாலும் அவளே அணைத்தாலும்அவளே—இந்த வார்த்தைகளை இவற்றின் உட்கருத்துணராது காதால்மட்டும் கேட்டுள்ளவர்கள் நம்மைப் பித்தன் என்றும் பேயனென்றும், உலகநடவடிக்கை யுணராதவனென்றும் சொல்லுவார்கள். சொன்னாலும், இவ்வார்த்தைகளின் உண்மையை வற்புறுத்திக்கூற இதுவே சமயமென்று நம் புத்திக்குமாத்திரமன்று, எல்லார்புத்திக்கும் பட்டிருப்பதால், அப்படியே செய்யத் தீர்மானித்தோம்.

ஐயோ! அர்பத்நட் கம்பெனி முழுகிப்போய் தோட்டி முதல் தொண்டைமான்வரையில், கவர்னர், ஜட்ஜிகள்முதல், காவல்காரர் உத்தியோகஸ்தர் எல்லாரும் அவரவர்களுக்கு ஜீவனாதாரமாக விருந்த பொருளையிழந்து சோற்றுக்கு வழியின்றித்தியங்கி, சுகத்துக்குக் குறைவின்றி வசிக்கமாட்டாமல் மனம் புண்பட்டுத் தவித்துக்கொண்டிருக்கிறார்கள்.—இந்தசமயத்தில் ஞானோபதேசம் செய்யப்புறப்படுகிறானே இவன்புத்தி என்ன புத்தியென்று சில உலகஞானிகள் நம்மை யிகழ்வார்கள். அப்படிப்பட்ட உலகஞானிகளில் பிரதமஸ்தானம் பெற்று பேரும் கீர்த்தியும், கல்வியும் செல்வமும், அந்தஸ்தும் அதிகாரமும் பெற்றவர்களும் கூட இந்த சமயத்தில் மேலுக்குப் படாடோபமாகப் பேசினாலும், தேனொழுக வினியமொழி கூறி "அக்காள் பாட்டுக்கு ஒக்கப்பாடி" யொழுகினாலும், அந்தரங்கத்தில் தங்கள் பஞ்சபூதமறிய அவர்கள் இச்சமயத்தில் ஈசுவரகிருபையைநாடி அதே கதியென்று நம்பியிருப்பதன்றி வேறில்லை. திவான் வேலையிலிருந்து ஒரு இராஜ்ஜியத்தின் பாரம் சுமந்து வகித்த ஒரு தீரபுருஷர், இச்சமயத்தில் திடீரென்று தேடிவைத்த பொருளையெல்லாமிழந்து ஜீவனவழியுமின்றி குஞ்சுகுழந்தைகளோடிருக்கிறவர்கள் என்ன செய்கிறதென்றால்—"ஈசுவரன்தான் வழிவிடவேண்டும்; மனுஷனால் ஆவது ஒன்றையும் காணோம்" என்கிறார். மனுஷனாலாவது ஒன்றுமில்லையென்று அவர் சொன்னதால், கையைக்கட்டிக்கொண்டு உட்கார்ந்திருக்கச்சொல்லவில்லை. ஈசுவரனைநம்பி வந்த கஷ்டங்களைப் பொறுத்துக்கொண்டு மனது சஞ்சலப்படாமல் நிதானமாயிருந்துழைத்துவந்தால், ஏதோ அவரவர்களுக்குத் தக்கவழி ஈசுவரகிருபையால் தோன்றும் என்று அவர் சொன்னதேயன்றி வேறில்லை. இன்னொரு பாரிமனுஷர் இப்பெருவிபத்தால் ஒரு நஷ்டமும் பட்டிலராயினும், ஜனங்கள் படும் அவஸ்தைகளைச் சகிக்கமாட்டாமல், காசும், பணமும், பேரும், கீர்த்தியும், கல்வியும் செல்வமும், அந்தஸ்தும், அதிகாரமும் பொருந்தவிருந்தும் இவற்றின் நிலைமையை

யுணர்ந்தவராய் இந்த ஜன்மமெடுத்ததற்கு யோகஸாம்ராஜ்ஜியம் ஒன்றைத்தவிர வேறு எந்த
ஸம்ராஜ்யமும் ஜன்மசாபல்யமளிப்பதல்லவென்று நினைப்பதாகக் கூறினர். ஒரு காலேஜ்
பரொபெஸ்ஸர் ஜனங்கள் அர்பத்நட் கம்பெனியில் பணத்தைக்கட்டி யிழந்துவிட்டு சுதேசி
சுதேசி யென்கிறார்களே, அவரவர்களும் இழந்த பொருள்களையெல்லாம் இத்தருணம் கை
ரொக்கமாகத் திருப்பிக்கொடுத்துவிட்டால் என்ன செய்வார்கள் என்று கேட்டதற்கு'
கொஞ்சநாள் பொத்திப்பொத்தி வைத்திருந்து முன்போல் புதைத்துவைப்பார்கள் அல்லது
மறுபடியும் பாங்கியில்தான் கொண்டுபோய்ப் போடுவார்கள்; அல்லது கவர்ன்மெண்டுக்கு
கடன்கொடுத்து கவர்ன்மெண்டுபத்திரம் வாங்குவார்கள்—இப்படி எந்த வழியில் போ
னாலும் கஷ்டநஷ்டங்கள் இருக்கவேயிருக்கிறது. இவைகளுக்கு பயந்து ஜீவிக்கமுடியாது.
ஆனால் நம்மவர்களிடத்திலுள்ள ஒரு பெருங்குறை யென்னவென்றால் நம்மவர்களுக்கு தன்
னைத்தானறிந்து தானேதானாயிருந்தொழுகும் திரகுணம் கிடையாது என்றார். "Character"
என்னும் வார்த்தை திரிகுணாதீதனாயிருந்து திரிகுணாத்மனாம் ஜீவனை யுள்ளபடியறிந்து அறிந்
தபடி யொழுகும் நடத்தை யொன்றுக்கே பூரணமாய்ப் பொருந்தத்தக்கது. மற்றப்படி
யதற்குச்சொல்லும் அர்த்தங்களெல்லாம் அரைகுறையர்த்தங்களும் அனர்த்தங்களுமேயாம்.
இப்படி மூவகையாக இம்மூன்று பேர்களும் எண்ணிய எண்ணங்கள் உண்மையாகப் பார்க்
கில் ஒன்றையே குறிக்கும். அது என்னவெனில் மனிதன் ஆத்மவிவேகத்தால் இவ்வுலகில்
நேரிடும் இன்பதுன்பங்கள் சுகதுக்கங்கள் இவைகளைப் பொறுத்து வகித்துச் சகித்தால் சகிக்
கலாமேயன்றி அநாத்மனாய் அவிவேகியாயிருந்து அவற்றைப் பொறுத்து வகித்துச் சகிப்
பது அசாத்தியம் என்பதேயாம்.

அர்பத்நட் கம்பெனி முழுகிப்போனதால் ஆயிரக்கணக்கான குடும்பங்கள் நல்ல
ஸ்திதியில் கனதனமாகவும் கௌரவமாகவுமிருந்ததிலிருந்து திடீரென்று உண்ணச்சோறும்,
உடுக்கத்துணியும் நிற்கநிழலுமின்றித் தவிப்பாராயினர். இவர்கள் தவிக்கும் தவிப்பு வெ
ளிப்படையாகத் தெரியாவிட்டாலும், இவர்கள் படும் அவஸ்தைகள் அதனால் குறைந்து
போகவில்லை; கௌரவமாக இருந்தவர்களாதலால் திடீரென்று தங்களுக்கு நேர்ந்த சங்கடத்
தை வெளிக்குக் காட்டிக்கொள்ள இஷ்டமின்றியும், மூடிவைக்க முடியாமலும் தவிப்பவர்கள்
மனோநிலையை அந்த நிலையிலிருப்பவர்கள் அல்லது இருந்தவர்கள் அறியலாமேயன்றி மற்ற
வர்கள் அறியமுடியாது. பிரிடிஷ் இராஜ்ஜிய மேற்பட்டது முதல் இந்தக் கம்பெனியிருந்து
பேரும் கீர்த்தியும் பெற்றுவந்தது. கவர்ன்மெண்டுக்குச்சேதம் வந்தாலும் இந்தக்கம்பெனி
க்குக் குறைவுவராது என்று சொல்லும்படி இவர்கள் எல்லாராலும் மதிக்கப்பட்டு வந்தார்
கள். இந்த அர்பத்நட் கம்பெனியைச் சேர்ந்தவர்கள் கோடீசுவரர்களென்று பேர்பெற்
றிருந்தமையால், எல்லாரும இவர்கள் ப்ரைவேட் பாங்கர்களென்று தெரிந்தும், இவர்களு
டைய குணத்தையும் செல்வத்தையும் நம்பி லக்ஷக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் அவ
ரவர்கள் பாடுபட்டுத்தேடிய பணத்தை நிலபலம் வாங்கினால் பாடுவருமென்று இவர்களிடத்
தில் வட்டிக்கிட்டு வைத்தார்கள். அந்தப்பணத்தைக்கொண்டு இவர்கள் செட்டு மட்டாய்
வியாபாரம்செய்து சீரும் சிறப்புமாய் வாழாமல், கண்டபடி யெல்லாம் தட்டுக்கெட்ட வியா

பாரங்களில் தண்ணிந்திறங்கி பெருமுதலிழந்து இப்பொழுது கையிலிருப்பது கடன்காரர்களுக்குக் கொடுக்க ஒன்றுக்கு அரைக்கால் ஆவது தேறுமென்று சொல்வதற்கின்றி திடீரெனக் கதவை மூடிவிட்டு கோர்ட்டில்போய் பாப்பர் ஸெர்டிபிகேட்டு கொடுக்க வேண்டுமென்று நிற்கிறார்கள். சென்னையிலுள்ள கம்பெனியார் 'குட்டு' இன்னம் வெளிவராமல் தானே கமுக்கமாக விருந்தாலும், லண்டனிலுள்ள இவர்கள் கம்பெனித் தலைவர் திடீரென்று நேர்ந்த விபத்தால் மனம் தாளாமல் ரயிலின்கீழ்விழுந்து தற்கொலை செய்துகொள்ள அந்தக் கம்பெனியின் கடன்காரர்களுக்கு ஜவாப்பு சொல்லவேண்டிய கோர்ட்டார் அந்தக் கம்பெனியின் ஸ்திதியை விசாரித்ததில் அவர்களுக்கு கடன் 4,70,000 பவுனிருக்க, சொத்துக்களின் மதிப்பு 20,000 பவுன் மட்டும் தானென்றும், இந்த விபத்து நேர்ந்ததற்குக் காரணம், செய்புசயம் வெட்டியெடுக்கும் சுரங்கம் சம்பந்தமாக முன்பின் பாராமல் 75,000 பவுனைக்கொட்டிக் கொடுத்து ஒன்றுமில்லாமல் தோற்றுப் போனதன்றி, இந்தியாவிலுள்ள அர்பத்நட் கம்பெனியார் 5,000 பவுன் அனுப்பவேண்டுமென்று கேட்டதும் காரணமாகச் சொல்லப் பட்டிருக்கிறது. இங்கேயுள்ள ஆர்பத்நட் கம்பெனியார் அவர்களுடைய லண்டன் அவுஸால் கதவை மூடவேண்டிவந்ததென்று சொல்ல, லண்டனிலுள்ள இந்த கம்பெனித் தலைவரான மிஸ்டர் மாக்பெடின், அர்பத்நட் கம்பெனியால் கதவை மூடவேண்டி நேரிட்டதென்று எழுதிவைத்துவிட்டுத் தற்கொலைசெய்துகொண்டிருக்கிறார். இதனுண்மை வெளியாகவில்லை. வெளிவருவதாகவும் தோற்றவில்லை. ஸர் ஜார்ஜ் அர்பத்நட்டுக்கு நேரில் எழுதிக்கேட்டோம். "இந்தக் கம்பெனியின் மானேஜ்மென்டைப்பற்றி ஒன்றும் சொல்லமுடியாது; ஆனால் உமக்கு நஷ்டம் வந்ததற்காக நான் மிக்க வருந்துகிறேன்"—என்று பதில் எழுதிவிட்டார். கைப்பொருளையிழந்து இழந்தபொருள் எப்படிப்போயிற்று என்கிற உண்மையும் தெரியாமல், தேங்கித்தவித்துக் கொண்டிருப் பவர்களுடைய நிலை பரிதபிக்கத்தக்கதா?, நேற்றுகோடீசுவரனென்று வாழ்ந்து இன்று கோர்ட்டில்போய் "நான் பாப்பர் என்னைக்கட்டின துணியோடு விட்டு விட்டால்போதும்" என்று தலையிறங்கி நிற்பவர்கதி பரிதபிக்கத்தக்கதா? இந்தக் கம்பெனி இப்படி திடீரென்று மூழ்கிப்போனது தெய்வகதியாலா அல்லது இதை நடத்தினவர்கள் பிசகாலா வென்பது தெரிந்தாலொழிய இக்கேள்விக்கு உத்தரம் சொல்வது சாத்தியமில்லை. ஆனால் இதன் உண்மை ஸர் ஜார்ஜ் அர்பத்நட் வசமிருக்க அவர் அதை வெளியிடாமல் மூடிவைத்துக்கொண்டு கோர்ட்டு முன் கேட்டால் சொல்லுகிறபடி சொல்லிக்கொள்கிறேன் என்று நெஞ்சழுத்தமாயிருப்பதால், ஜனங்கள் ஸ்வபாவமாகவே அக்கம்பெனியின் ஸ்திதியைப் பற்றியும் அவர்கள் நடத்தையைப் பற்றியும் தெரிந்தவர்கள் ஏதேதோ சொல்வதை நம்பி அலமலர்ந்து "ஐயோ! இப்படி மோசம் போனோமே!"யென்று தியங்கித்தவிக்கிறார்கள். இக்கம்பெனியின் முதலாளிகள் நடத்தையைப்பற்றி இதற்குமேல் ஏதும் சொல்வது இப்பொழுது சாத்தியமாகவில்லை. டிசம்பர்மீ 3உ யன்று இவர்களுடைய இன்ஸால்வென்ஸி பெண்டிஷன் (பாப்பர்மனு) விசாரணைக்கு வருமென்று குறிக்கப்பட்டிருக்கிறது. இன்னம இவர்களுக்குள்ள கடன் தொகை இவ்வளவு, சொத்து இவ்வளவு என்று நிச்சயமாகத் தெரியவில்லை. ஊகமாய்க் கணக்கிட்டுப் பார்க்கிறவர்கள் ரூபாய்க்கு ஒரு அணா தேறுவதுப் கஷ்டமென்கிறார்கள். உண்மையெப்படியோ தெரியவேண்டும். இதுநிற்க.

"திக்கற்றவர்க்குத் தெய்வமேதுணை" யென்று மகுடம் சூட்டி இதையெழுத ஆரம்பித்தோமே! இத்தனை ஜனங்கள் திக்கற்று நிற்கிறார்களே இவர்களுக்கு தெய்வம் என்னதுணை செய்யுமென்று கேட்கலாம். "தெய்வம் காட்டுமேயன்றி ஊட்டாது." மனதை நிறுத்தி சஞ்சலப்படாமல் நிதானமாயிருந்து பார்த்தால் நேர்ந்த கஷ்டத்தில்பாதிக்குமேல் முக்கால் பங்குவரையில் போய்விடும். எப்படி யென்றால் சுத்தாத்மனுக்கு சுகமும் துக்கமுமில்லை. அப்படியென்றால், இரண்டும் சமன் என்றபடி. ஆத்மவிவேகிக்கு சுகதுக்க முண்டானாலும் அது மனதுக்கேயன்றி தனக்கில்லையென்று தான் சாக்ஷிமாத்திரமாக நின்று பார்ப்பான். இது ஆத்மபுத்தி யுள்ளவர்களுக்கு, அதாவது, மனதையடக்கித் தன்சொரூபத்தை யுள்ளபடியறிந்துப்பக் கற்றவர்களுக்குப் பொருந்தும். "அநாத்மன்" நான் தேகம் பிராணனென்று நம்பியிருப்பவனாதலால் அவன் தேகசம்ரக்ஷணைக்கு வேண்டிய பொருள் போனதும் அதோடு மானம், மரியாதை, கௌரவம் எல்லாம் போய்விட்டதென்று மனங்கலங்கி சித்தப்பிரமை கொண்டு தடுமாறிப் பித்துப் பிடித்தலைவான்; அல்லது மாக்பெடினைப்போல மானத்துக்கு பயந்து தற்கொலை செய்துகொண்டாலும் செய்வான். இந்த விபத்து நேர்ந்ததில் எத்தனையோபேர்கள் மூர்ச்சித்துப் போனார்கள். எத்தனையோபேர்கள் சித்தப்பிரமை கொண்டு இன்னும் தெளியாமல் திரிகிறார்கள். சிலர் இவ்விபத்தால் நேர்ந்த மன அதிர்ச்சி தாங்காமல் இறந்தே போய்விட்டார்கள். இதனால் தேகம் படும் அவஸ்தையை விட, மனம் படும் அவஸ்தையே பெரிது. இவர்களில் ஒருவரும் சாப்பாட்டுக்கில்லாமல் சாகவில்லை. ஆனால் எல்லாம் போய்விட்டதே யென்று நினைத்த போதே மனதுக்குண்டான ஏக்கம் இவர்கள் உயிரை யொடுக்கி உடலைச் சுருக்கிப் பிராணனைக் கொண்டு போய்விட்டது. இந்த மனஏக்கம் நம்மையின்றி வந்தால் அது நம்மைத்தூங்கச் செய்து விடுகிறது. தேகத்திலுள்ள அபிமானத்தினால் அந்த சமயத்தில் தேகம் விழுந்துபோய்விடுகிறதைக்கண்டு திகிற்பட்டுப் பயப்படுவதால், அத்தூக்கம் மூர்ச்சையாகவும், மரணமாகவும் மாறிவிடுகிறது. அப்படிமனதை யதன்வழி போகவிடாமல் தன் ஸ்வரூபத்தை யறிந்து ஆத்மானுசந்தானத்தால் அதை யடக்கி நம்வழிப்பட்டுவரப் பழக்கினால் அதுவே யோகம். நம்முடைய கட்டுக்கடங்காமல் வந்து மூர்ச்சையாகவும் மரணமாகவும் நம்மைப் பிடிப்பதே, அம்மனதைக் கட்டுப்படுத்தி யடக்கியாளத் தெரிந்தவர்களுக்கு 'லயயோகம்' என்று சொல்லும் அனுபவமாக மாறுகிறது. இந்த லயயோகத்தால் யோகியானவன், வாதி இரஸத்தைக்கட்டுவதுபோல் தன் மனதைக் கட்டி "காலவஞ்சனம்" செய்து அதனால் எல்லாசித்திகளையும் அடைகிறான். ஆனால் ஆத்மானுசந்தானத்தாலன்றி வேறு எவ்விதத்தாலும் இம்மனதைக் கட்டமுடியாது. ஆத்மானுசந்தானம் செய்யும் யோகிக்கு அவன் மனது தானேவந்து கட்டுப்படுகிறது. இராமருக்கு அனுமார் உதவியாயிருந்தாற்போல அவன் மனம் வியவகாரமுகத்தில் அவனுக்கு எல்லாப் பணிவிடைகளும் செய்து உதவுகிறது. அனுமார் ஸ்ரீராமபிரானுக்காகச்செய்த அருந்திறலாற்றல்கள் (அருமையும் திறமையும் பொருந்திய சாகஸச்செய்கைகள்) எல்லாம் ஆத்மஸம்பமத்திலிருக்கும் யோகிக்கு அவனுக்குக் கட்டுப்பட்டமனதால் சாத்தியமாகும். இதன் மர்மம் அனுஷ்டானத்திலிருந்து அப்பியசிப்பவர்களுக்கன்றி வேறு எவருக்கும் உள்ளபடி விளங்காது. வெளிப்பார்வைக்கு அவர்கள் எல்லாரையும்போல் அழுதுகொண்டு அலைந்து

கொண்டிருப்பவர்போல்தான் தோற்றுவார்கள். ஆனால் அவர்கள் மனம் ஒருபோதும் நிலைகுலைந்து கலங்காது. சீதையைப் பறிகொடுத்த இராமர் என்னதான் தவித்தாரானாலும் அவருடைய மனமாகிய (அவரிடத்தில் பக்திவைத்த) அநுமார் அப்படியொன்றும் அழவில்லை. ஆனால் காரியதுரந்தரராயிருந்து செய்யாத காரியங்களெல்லாம்செய்து சீதையிருக்குமிடம் தேடி அவருக்கு ஆறுதல் கூறி இராமருக்கும் சமாசாரம் தெரிவித்தார். இராமர் கடலைக்கடக்க சேதுபந்தனம் செய்யவேண்டியதாயிற்று. அவரிடத்தில் உண்மைப்பக்தி வைத்த அநுமாரோ அவருடைய பக்திப்பிரவாகத்தில் ஒரே எழும்பாக எழும்பி ஒருதாவலில் தாவிக்குதித்துவிட்டார். இந்த இரகசியத்தை பஹிர்முகப்படுத்திக் காட்டவேண்டி வான்மீகரிஷி ஒவ்வொரு குணத்தையும் ஒரு உருவகமாகச் சிருஷ்டித்து வர்ணிக்கலானார். இராமருக்குள்ள வானரசேனைகளைப் போலவே, பக்தர்கள் யோகிகள் எல்லாருக்கும் அவர்கள் பாவனாரூபமான வானர சேனைகள் கணக்கிலகப்படாமலிருக்கின்றன.

இச்சேனா சமுத்திரத்தைச் சிருஷ்டித்துக் காபாற்றியாளத் தெரியாமற்றான் ஜனங்கள் தவிக்கிறார்கள். ஒரு மனிதனிடத்தில் ஒரே துப்பாக்கி யிருக்கலாம். ஆனால் அவனிடத்தில் மருந்தும் குண்டுகளும் குறைவின்றியிருந்தால் அத்துப்பாக்கி ஒன்றையேகொண்டு ஆயிரம் பதினாயிரம் லக்ஷமென்று எத்தனையோவெடிகள் தீர்க்கலாம். அதுபோலவே இந்தஸ்தூல சரீரத்தை வைத்துக்கொண்டு, இதற்குள்ளிருக்கும் லிங்கசரீரமாம் மனதை இதைவிட்டுப்பிரித்துக் கொள்ளத்தெரிந்தால், இந்தலிங்கசரீரமாம் மருந்தைக்கொண்டும், இதனுள்ளிருக்கும் சங்கல்பரூபமான வாசனாசரீரமாம் குண்டுகளைகொண்டும் எத்தனையோ சங்கல்பங்கள்செய்து நிறைவேற்றிக்கொள்ளலாம். "யத்பாவம்தத்பவதி." ஆத்மானுசந்தானமுள்ளவன் எப்படி நினைக்கிறானோ அப்படியே சம்பவிக்கிறது! நம்முடைய பூர்வ சங்கல்பங்களை நாமறியக்கூடாமையாற்றான் வரும் வில்லங்கங்கள் நமக்கு அந்நியமானவைபோல் தோன்றுகின்றன. துரியோதனாதிகளைப்போல துஷ்டப்பிள்ளைகளைப்பெற்ற திருதராஷ்டிரன் தான் கபோதியானாலும், புத்திராபிமானத்தால் அவர்களையெல்லாம் தன்புத்திரர்களாக பாவித்ததால் அவர்கள்செய்த அக்கிரமங்களுக் கெல்லாமுடன்பட்டும் அவர்கள் செய்கைகள் அவனுக்குள் வேற்றுமையுண்டாக்கவில்லை. தான் நினைத்தநினைவுகளன்றி வேறுவிதியொன்றும் அங்கில்லை. அந்தநினைவுகளைஅடக்கி அவைகளை நல்வழியிலுபயோகிக்கும் மர்மமறிந்து அந்த வழியில்நின்று பழகுவதே யோகம்: யோகம் என்றால் ஐக்கியத்தைக்குறிக்கும். மனதைச் சுத்தப்படுத்தி ஆத்மாவோடு ஐக்கியப்படுத்துவதே யோகசமாதி. இது எப்படியாகுமென்றால், ஆத்மஅநாத்ம விவேகத்தால் ஆத்மாவைக் குருமுகமாகவறிந்து ஆத்மானுசந்தானம் செய்வதால் பிரமரகீட நியாயம்போல் சம்பவிக்கும். அதாவது குளவியினால் கொட்டப்பட்ட பச்சைப் புழுவானது எப்படி குளவியின்கொட்டுவலியையும் அதன் ரீங்காரத்தையும் நினைத்துநினைத்துக் குளவியேயாய்விடுகிறதோ அப்படிப்போல பச்சாதாபத்தாலும் ஜீவகாருண்யத்தாலும் இளகினமனதானது ஆத்மானுசந்தானத்தால் ஆத்மாவேயாகிவிடுகிறது. இது தான் ஆத்மசம்யமயோகம். இந்த ஆத்மஸம்யமயோகத்தில் தேர்ந்தவன் இந்த தேகம் நான்என்கிற தப்பெண்ணத்தைவிட்டு "எல்லாம் நீ" என்கிற பாவனைமேற்கொண்டு ஈசுவரனைவிராட்ரூபியாகப் பார்த்து ஸர்வபூதங்களிலும் அந்த

ஈசுவரனையேகண்டு சேவிக்கிறான். இப்படிப்பட்ட யோகியானவன் அநேகவிதமாகப் பிரவிர்த்திக்கிறவனாகவிருந்தாலும் அவன் எல்லாவற்றிலும் ஈசுவரப்பிரவர்த்திய யுள்ளவனாகிறானென்று பகவான் அர்ச்சுனனுக்கு உபதேசிக்கிறார்.

"ஸர்வபூதஸ்திதம்யோமாம்பஜத்யேகத்வமாஸ்திதம்
ஸர்வதாவர்த்தமாநோபிஸயோகீமயிவர்த்ததே."

மேலும், இப்படிப்பட்ட யோகியானவன் சுகதுக்கங்களெல்லாம் கடந்தவனானாலும் ஸர்வபூதசுகதுக்கங்களையும் தன்னதாகப்பாவிக்குந் தன்மையுள்ளவனாகிறான்—இப்படிப்பட்டவனை பகவான் தனக்குச் சம்மதமான பரமசிரேஷ்டனென்று சொல்லியிருக்கிறார்.

"அர்ச்சுனா! எவன் ஸர்வபூத சுகதுக்கங்களைத் தன் சுகதுக்கங்களாக பாவித்திருக்கின்றானோ, அந்தயோகி எனக்குச் சம்மதமான பரமசிரேஷ்டனென்றறிவாயாக" என்று சொல்கிறார். அர்ச்சுனன் சஞ்சலரூபஸ்வபாவமான மனதையடக்குவது அசாத்தியமாயிருக்கிறதேயென்றுசொல்ல, கிர்ஷ்ணபகவான்:-"அர்ச்சுனா! மனம் சஞ்சலமானதும் நிக்கிரகிக்கச் சாத்தியமில்லாததும் என்பதற்குச் சந்தேகமில்லை. அவ்வாறிருப்பினும், ஆத்மானுசந்தானப்பியாசத்தாலும், வைராக்கியத்தாலும், அப்படிப்பட்ட மனதைச்சுவாதீனம் செய்துகொள்ளவேண்டும். சித்தசுவாதீனமில்லாதவனுக்கு யோகம் அசாத்தியம்; சித்தசுவாதீனமுடையவன் தக்க உபாயத்தாற் பிரயத்தனப்பட்டு யோகியாவானென்பது என்னபிப்பிராயம்" என்றுசொல்கிறார்.

யோகம் கஷ்டசாத்தியமாயிற்றே, யோகம் செய்யத்துணிந்தும் நியமந்தவறி யோகப்பிரஷ்டனானால் அவன்கதி அதோகதிதானேயென்று சங்கையுற்றுக்கேட்ட அர்ச்சுனனுக்கு பகவான் சொல்கிறார்:—

"பார்த்தனே! அவ்வகைய யோகப்பிரஷ்டனுக்கு இகலோகத்திலும் பரலோகத்திலும் நாசமில்லை அப்பனே! நன்மைசெய்தவன் ஒருகாலத்திலும் கெட்டுப்போகான்." மேலும்,—

"தபஸ்விப்யோதிகோயோகீஞானிப்யோபிமதோதிக:
கர்மிப்பசாதிகோயோகீதஸ்மாத்யோகீபவார்ஜுந."

"அர்ச்சுனா! யோகியானவன் தவசிகளைக்காட்டிலும், சாஸ்திரார்த்த பண்டிதர்களைக்காட்டிலும் கருமநிஷ்டர்களைக்காட்டிலும் அதிகன் (உத்தமன்.) அந்தக்காரணத்தால் நீ யோகமுடையவனாகப்பெறு."

"யோகிநாமபிஸர்வேஷாம்மத்கதேநாந்தராத்மநா
சிரத்தாவாந்பஜதேயோமாம்ஸமேயுக்ததமோமத:"

எவன் விசுவாசமுற்று என்னையாசிரயித்து மனதாற் சேவிப்பானோ, அவனேயெல்லா யோகிகளிலுஞ் சிறந்தவனென்பது என்மதம்"

இப்படிபகவானே யோகத்தைச் சிலாகித்து அவருக்குநண்பனும், பக்தனும், உத்தமபாத்திரனுமான அர்ச்சுனனை யோகஸாம்ராஜ்யத்தைப்பெறும்படிச் சொல்லியிருப்பதால் அது நம்மெல்லாருக்கும் சொன்னதாகக் கொள்ளவேண்டியது. ஆனால் ஒன்றுமட்டும் இக்

காலத்தில் நாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டியது; த்ரிகரணசுத்தியாகவுழைத்தாலன்றி யோகப்சித்திக்காது—சித்திக்காதமட்டுமல்ல; ஆபத்தும் விளைவிக்கும். ஏனென்றால் மனதைக்கிளப்பி அதன் சேஷ்டைகளையடக்க முயலுபவன் எவ்வாற்றானும் உத்தமபுருஷனாகவிருக்கவேண்டும். மனமொழிமெய்களால் ஸத்யத்தை யனுஷ்டிக்க மாட்டாதவன் காலத்துக்குத்தக்கவேலம் போட்டாடுவதால் என்னதான் காசும்பணமும் பேரும்கீர்த்தியும் பெற்றவனானாலும் அவன் ஒருக்காலும் உத்தமபுருஷனாகான். இந்த அர்பத்நட் கம்பெனி முழுகிப்போனதும் அவர்கள் உண்மையைவிட்டு விலகினதினால்தான் என்று உள்ளபடி விசாரித்தால் ஸ்பஷ்டமாய்ப்படும். கடைசிநிமிஷம்வரையில் ஜனங்கள் அவர்களிடத்தில் சமுசயம்கொள்ளாமல் அவர்களைநம்பி ஆயிரக்கணக்காகவும் பதினாயிரக்கணக்காகவும் பணத்தைக்கட்டிவந்தார்கள். ஆனால் சிலவருஷங்கள் முன்னதாகவே தங்கள் கைசளைத்துப்போனது தெரிந்தும் வர்த்தகசாமர்த்தியம் செய்வதாகப் பாசாங்குகாட்டி உள்ளதையொளித்து உண்மையைவிட்டு விலகினதினால் 106-வருஷம் அதி கௌரவமாகவிருந்த கம்பெனி ஒரு நிமிஷத்தில் அசேதாசுதியாகி ஆயிரக்கணக்கான ஜனங்களைத் திண்டாடவிட்டு அவர்களுடைய பழிபாபங்களையும் சாபங்களையும் வாங்கிக் கட்டிக்கொண்டு உலகுக்கெல்லாம் பழிப்புக்கிலக்காகி நிற்கிறார்கள். "மெய்யேவெல்லும் பொய்யல்ல" என்பது வியாபாரத்திலும் ஸத்யமே.— "அரசன் அன்று கொல்லும், தெய்வம் நின்றுகொல்லும்" என்னும் பழமொழிமட்டும் இந்த தர்மராஜாங்கத்தில் பொய்க்கலாயிற்றேயென்று ஜனங்கள் எங்கும் ஓலமிட்டுப்புலம்புகிறார்கள். "இராஜாங்கம் இப்படியும்போமா!" என்கிறார்கள் இங்கிலீஷ்படியாத பெருங்குடிகள். இதற்குப்பதில்சொல்ல இடம்கொடுக்காமல் சர்க்காரும் நடந்துகொள்கிறார்கள்.

---

SELF-CONTROL AND SELF-RELIANCE.

or

## "YOGA IS THE ONLY THING WORTH STRIVING FOR." YES! BUT WHAT IS YOGA?

## "தன்னடக்கமும் தன்னுறுதியும்," அல்லது, யோகஸாம்ராஜ்யமேஜன்மசாபல்யம். ஆம்! ஆனால் யோகமென்றால் என்ன?

யோகமென்றால் என்ன? மூச்சையடக்குவதும், மூக்கைப் பிடித்துக்கொண்டு வௌவாலைப்போல் தொங்குவதும், இன்னம் இல்லாத ஹடங்கள் செய்வதும், மற்றப்படி தேகத்தைப் போட்டு வதைப்பதும் யோகமல்ல. மிருகப்பிராயமாயுள்ள மந்த மதிகளுக்கு தேகபாவனை போகும்பொருட்டு பிராணிகளை ஸர்க்கஸ் வித்தையில் பழக்குவதுபோல் அவர்கள் தேகத்தைப் பலவிதத்தில் பழக்க அநேகம் வழிகள் ஏற்பட்டிருக்கின்றன. இவையெல்லாம் யோக சப்தத்திற்கு லக்ஷியமாகா.. பின்னென்னவெனில்: யோகம் என்பது யுக் (=சேர்க்கை=ஐக்கியம்) என்னும் தாதுவிலிருந்துண்டானது. இந்த சப்தம் இரண்டு வஸ்துக்களின் சம்பந்தத்தைக் குறிப்பது. இந்த சம்பந்தம் இருவகைப்படும். அவையாவன: (1) ஸம்யோக சம்பந்தம்; (2) தாதாத்மிய சம்பந்தம். ஸம்யோக சம்பந்தம் என்பது

காஷாயமும் வஸ்திரமும் போல் சேர்ந்துள்ளது. இந்தச் சேர்க்கை பிரிவினைக்குள்பட்டது,
அதாவது, கூடிப்பிரியும்தன்மைவாய்ந்தது. மற்றொன்றாகிய தாதாத்மிய சம்பந்தம் ஒன்
றுக்குள்ஒன்றாய்ப் பேதமற இரண்டும் அத்துவிதமாக ஒன்றுபட்டு நிற்பதாம். இதற்குதா
ரணம் அயபிண்டம் :—இரும்பினாலான உருண்டையைப் பழுக்கக் காய்ச்சினால் அந்த இரும்
புக்கும் அக்கினிக்குமுள்ள சம்பந்தம் தாதாத்மிய சம்பந்தமென்று சொல்லப்படுகிறது. இன்
னொரு உதாரணம் அவயவங்களும் அவயவியும்போல்; உறுப்புகள் அவைகளையுடையவ
னுக்கு வேறானவையல்ல. தாதாத்மிய சம்பந்தமுள்ள பொருள்களை பிரத்தியக்ஷத்தில் வேறு
பிரிக்கமுடியாது. பிரித்தால் ஒன்றில் ஒன்று அடங்கி எப்போதும் மிகுந்த ஒன்றுமட்டும்
ஏகமாய்த் தோன்றிநிற்கும். ஆனால் மனசுக்குள் அதை புத்தியினால் பகுத்தறியலாம். அதா
வது ஒன்றைத்தள்ளி ஒன்றைமட்டும் மனத்தால் கிரஹிக்கலாம். இப்படி இரண்டையும் வேறு
வேறாகக் கிரகிக்கும்போது இரண்டும் வேறுபோல் பேதமாகத் தோன்றும். ஆனால் இது
மனத்தோற்றமாத்திரமேயன்றி வாஸ்தவத்தில் இரண்டாய்ப் பேதிக்கத்தக்கதல்ல. மனதி
னுடைய சக்திகளில் முக்கியமான ஒன்று என்னவெனில் :—ஒரு பொருளினின்றும் பிரிக்
கப்படமுடியாத குணங்களைப் பிரித்துணரும் சக்தியாம். இதனால் உபாதிசகிதமான ஒரு
உண்மையை யுணர்ந்து அதன் உபாதியைத் தள்ளி உண்மையைமட்டும் கிரகிக்கும் சக்தி
மனதிற்கேயுள்ளது. இந்த அபாரசக்தியைக்கொண்டு மனிதன் மற்றப்படி மனோவாக்குக்
காயங்களால் அளவிட்டு முடியாத இந்தப் பிரபஞ்சத் தோற்றங்களை ஆராய்ந்து அவைக
ளின் அந்தர்ப்பூதமாய் விளங்கும் சில உண்மைகளைமட்டும் தனித்துணர்ந்து அந்த உண்மை
களின் உள்நிலைமையையும் அப்படியே பிரித்துணர்ந்து கடைசியில் கோடிகிரந்தங்களாலும்
சொல்லிமுடியாத இந்த மாயாப்பிரபஞ்சத்தை தத்துவமாத்திரமாக் வுணர்ந்து அத்தத்து
வங்களின் ஸ்வபாவத்தை யோகஸம்யமத்தில்—"தானதுவாய் நின்ற அவஸ்தையில்," உள்ள
படி அறிந்துகொள்கிறான். இதற்கு தத்துவதரிசனமென்று பேர். இந்த தத்துவதரிச
னம் பெற்றவன், இத்தத்துவங்கள் எல்லாவற்றினுள்ளும் முத்துமாலையில் சரடுபோல் புகு
ந்து இவைகளை ஒன்றுபடுத்தி நிற்கும் சித்த முத்த சுத்தப்பொருளாம் உத்தமபுருஷனை
உணர்ந்துய்ய அடங்கா ஆவல்கொண்டவனாகிறான். ஊசியைக் காந்தமிழுப்பதுபோல் இவன்
மனம் அந்த மெய்ப்பொருளால் இழுக்கப்படுகிறது. "தத்துவமெங்குண்டு, தத்துவனங்
குண்டு" என்னும் திருமந்திரோபதேசப்படி தத்துவதரிசனம்பெற்ற யோகி தத்துவாதீத
னும் (கடவுள்) தத்துவனால் இயற்கையாகவே இழுக்கப்பட்டு அந்த ஐக்கியபோகசத்தியினி
ன்றும் தப்பமுடியாதவனாய் "சித்தன்போக்கு சிவன்போக்கு" என்றபடி மனதை அந்த
உத்தம புருஷனும் புருஷோத்தமனிடத்தில் பற்றச்செய்து "பற்றற்றார் பற்றாகப் பற்றிநிற்கு
மவன் "வழிப்பட்டு அதனின்று பிறழச் சக்தியற்றவனாயிருக்கும் நிலையெதுவோ அதுதான்
பக்திநிலை. அதுதான் அருட்பேறு. அதுதான் உண்மையான யோகசித்தி. இந்த நிலையில்
"கடவுளும் நானுமொன்றானேன்" என்னும் திருமந்திரத்துக்கொப்ப இடைவிடாது ஐக்
கியபோகத்திலிருப்பதுதான் யோகஸாம்ராஜ்யம். இந்த யோகஸாம்ராஜ்யம் பெற்றவன்
எவனோ அவன்தான் யோகி. இந்த யோகி தான் "ஸ்ரீபகவானுக்குச் சம்மதமான உத்தம
சிரேஷ்டன்." இந்த உத்தம சிரேஷ்டன் எவனோ அவனே ஜனசிரேஷ்டனுமாவன். இப்
படிப்பட்ட உத்தம பாத்திரங்களின் உண்மையுணர்ந்தே நம் பூர்விக அரசர்கள் ரிஷி

திருக்கிறதோ அவனுடைய திருஷ்டியிற் பட்டவர்களெல்லோரும் சகல பாதகங்களிலிருந்தும் விடுபடுகிறார்கள். பிர்ம்மவித்தானவனுடைய திருஷ்டியிற்பட்ட, ஆகாசத்திலும் பூமியிலும் சஞ்சரிக்கப்பட்ட சகலமானவர்களும் அநேககோடி ஜன்மங்களில் செய்த பாபங்களிலிருந்து உடனே விடுபடுகிறார்கள்.

(நான்காவது அத்தியாயம் முற்றிற்று.)



# HAMLET, THE TRANSCENDENTALIST.

(FROM SHAKESPEARE).

# ஹேமசந்திரஸிங் என்னும் ஆத்மவிசாரி.

(ஆங்கிலத்தின் மொழிபெயர்ப்பு.)

*By Sri Rajanayaki.* (ஸ்ரீராஜநாயகி.)

## நாடகபாத்திரங்கள்.

### புருஷர்கள்.

விலேசவர்மன்—உதயபுரிராஜு.

ஹேமசந்திரஸிங்—விலேசவர்மாவின் தமையனாகிய இறந்துபோன ஹேமசந்திரவர்மாவின் குமாரன்—பட்டத்துக்கு இளவரசன்.

புலஸ்தியவர்மா—ராஜுவின் அந்தரங்க காரியதரிசி.

ஹரிராஜஸிங்—இளவரசனுடைய தோழன்.

லக்ஷ்மணஸிங்—புலஸ்தியவர்மாவின் குமாரன்.

வருணமித்திரன்<br>கிருஷ்ணதாசன்<br>உக்கிரருத்திரப்பிரதாபன்<br>ஏடோர்க்கஜசேனன்<br>ஆலஹரிசன் } ஆலோசனை சபையோர்.

பிருகத்சேனன்<br>மார்க்கசேனன் } சேனை உத்தியோகஸ்தர்கள்.

வீரசேனன்—அரண்மனைக்காவல் சிப்பாய்.

பிரதாபஸிங்—ஜோதிபுரி ராஜ்யத்து இளவரசன்.

ராதாகிருஷ்ணன்—புலஸ்தியவர்மாவின் வேலைக்காரன்.

### ஸ்திரீகள்.

ஜோதிமஹால்—ஹேமசந்திரவர்மாவின் விதவை; ஹேமசந்திரஸிங்குக்குத் தாய்; தற்காலம் விலேசவர்மாவின் மனைவியாகிய இராணி.

உத்பலாக்ஷி—புலஸ்தியவர்மாவின் மகள்.

### இதரர்கள்.

புரோகிதர்கள், பிரபுக்கள், சேனாதிபதிகள், சிப்பாய்கள், நாடகக்காரர்கள், அந்தர்கள், சேவகர்கள், தோட்டிகள், ராஜஸ்திரீகள், பெருமாட்டிகள், முதலியோர்கள்.

இறந்துபோன ஹேமசந்திரவர்மாவின் பிதிருதேவதை.

ஸ்தலம் } ராஜ்புத்திர சமஸ்தானம்.<br>உதயபுரிபட்டணம்.

காலம்:—டில்லி சக்ரவர்த்திகளின் காலம்.

"The blessed gods in servile masks
Plied for me my household tasks."—*Emerson.*

"The World means intensely, and means good;
To find out its meaning is my meat and drink."
—*Robert Browning.*

"If you are in need of the fruit of my labour,
I am in greater need of the labour itself,
I perish of rust and rest."—*Emerson.*

### 2-வது காக்ஷியின் தொடர்ச்சி.

ஹேமசந்:—அம்மா, ஆட்டம் எப்படி இருக்கிறது?

ராணி:—இந்த ராஜாத்தி அதிக பூதஞ்சி பண்ணுகிறாள் என்று தோன்றுகிறது.

ஹேமசந்:—இருந்தாலும் சொன்னசொல்லை நிறைவேற்றுவாள்.

ராஜு:—கதையின் வரலாறு முழுமையும் உனக்குத் தெரியுமா? அதில் நாம் பார்க்கத்தகாத விஷயம் ஒன்றுமிராதே?

ஹேமசந்:—சே, சே! அப்படியொன்றுமில்லை. இதெல்லாம் விளையாட்டுத்தான். விளையாட்டுக்காக விஷம் கொடுப்பதுபோல் பாவனையே ஒழிய நிஜமாக ஒன்றுமில்லை. இதிலென்ன பார்க்கத்தகாதது?

இவர்களை யமதர்மராஜா இவர்கள் செய்த அற்ப சொற்ப புண்ணியங்களின் பலனும் கழியும் பொருட்டு இகபோகபலனைக்கொடுத்து மனுஷஜன்மமெடுத்தும் மிருகஜன்மம் லபிக்கும் படிச் செய்கிறார். இதைக்கண்டு மூட ஜனங்கள் மயங்குவார்களேயன்றி உண்மையுணர்ந்த விவேகிகள் மயங்கமாட்டார்கள். ஆனால், அநியாயம் வலுக்கும் இக்காலத்தில் நானும் அநியாயவழிபற்றியே பிழைக்கிறேன் என்று சொல்லலாம். இந்த எண்ணம் இனியுதிப்பதில்லை. இவ்வெண்ணம் உதித்து இதன் வழிப்பட்டுக் கெட்டதின் பலனைத்தான் இப்பொழுது நாமனுபவிக்கிறோம். தற்கால நாகரிகமிகுந்த ஒரு புத்திசாலியை "ஐயா இராமராகப் பிறந்து பெண்டாட்டியைப் பறிகொடுத்துத் தவிப்பது மேலா, இராவணனாகப்பிறந்து சீதையைத் திருடிக்கொண்டுபோவது மேலா' இந்த இரண்டில் எது உமது மனோபீஷ்டம்? இராமாயணக் கதையின் முன் பின் சங்கதிகளை மனதில்வைத்துச் சிந்தித்துச் சொல்லுமென்றேன். இராவணனாய்ப் பிறந்து உள்ளமட்டும் படாடோபம்செய்து கடைசியில் மாண்டாலும் அதுதான் எனக்குப் பிரியம் என்றார். உடனே நான் "உங்களுக்கு அண்ணா ஒருவர் இப்படித்தான் சொல்லி இன்னம் இராஜ்யமாள்கிறார்" என்றேன். யார் என்று கேட்டார். அவர் இங்கிலீஷ்படித்த மேதாவியாதலால் "Better to reign in hell than serve in heaven" என்கிற வாக்கியத்தைச் சொன்னேன்.—இது "சாத்தான்" (Satan) எனும் துர்நமித்த புருஷன் கடவுள் பக்கத்திலிருந்து அவர் திருவடிபணிந்து சேவிப்பதிலும், நரகத்துக்குச் சென்று அங்கே படவேண்டிய நரகவேதனைகளையெல்லாம் பட்டுக்கொண்டாவது அரசாள்வதுதான் எனக்குப் பிரீதியென்று சொன்னார் என்கிற 'பைபிள்' கதையென்று சொன்னேன். அதற்கும் அவர் அஞ்சாமல், "ஆம் அமெரிக்காவில் கோடீசுவரனான ஒரு தனவான் சாத்தானுக்கென்று ஒரு கோவில் கட்டிவிட்டதாகப் பத்திரிகைகளில் வந்ததை நீங்கள் பார்த்ததில்லையோ" என்றார். "ஆம்! பார்த்ததுண்டு. ஆனால் அவர் அறியா மூடர். "தேஹோ தேவாலய:" என்பதுபோல முன்னமேயவர் தன் தேகத்தை அவனுக்கு இருக்க ஆலயமாக நிருமித்துவிட்டபடியால் கல்லும் சுண்ணாம்பும் கொண்டு கட்டிய கோவிலினால் அதிசயமொன்றுமில்லை" என்றேன். சிரித்துக்கொண்டு "காலம் அப்படியிருக்கிறது" என்றார்.

"அதைத்தான் நம்மவர்கள் கலிகாலம் என்கிறார்கள். கலி முதிர்ந்தால் கிலி பழுக்கும். கிலி (பயம்) முதிர்ந்தால் எலி ஜன்மம்தான்." என்றேன். அந்த சம்பாஷணை இப்பொழுது ஞாபகத்துக்கு வருகிறது. நம்மவர்கள் "Character" என்று சொல்லும் யோகசித்தியில்லாமல் பொதுநன்மைக்குப் பாடுபடுகிறோமென்று சொல்லி ஆர்ப்பரிப்பது என்னமாயிருக்கிறதென்றால், எலிகள் கூட்டம் கூடி பூனையினுடைய பயம் பொறுக்காமல் அதன் கழுத்தில் ஒரு மணியைக் கட்டிவிட ஆலோசனைசெய்த கதையாகவிருக்கிறது. வீண் மனோராஜ்யம் செய்வதெல்லாம் யோகமல்ல.

யோகம் என்றால் பின்னையென்ன? பதஞ்சலி யோகசூத்திரத்தில் சொல்லியிருக்கிறபடி—"சித்தவிருத்தி நிரோதனமே யோகம்." மனதை யடக்குவதே யோகம்.

"தன்னைத்தானெஞ்சங் கரியாகித் தானடங்கிற்
பின்னைத்தானெய்தாற் படனில்லை—தன்னைக்
குடிகெடுக்கும் நெஞ்சிற்குக் குற்றேவல்செய்யின்
பிடிபடுக்கப் பட்டதோர் களிறு."

தன்னைத் தானறிந்து (தான் ஆத்மாவென்றுணர்ந்து) தன் மனது சாக்ஷிமாத்திரமாக நிற்க அதற்கு அடங்கி நின்றால் பின்னைச் சம்பவிக்கும் சுகதுக்கோபாதிகளால் (அவை ஆத்மாவைப் பாதிக்காவாதலால்) பிரயோஜனமில்லை. அப்படிக்கின்றி தன்னைக்குடிகெடுக்கும் நெஞ்சிற்கு (மனம்போனபடி சென்று) குற்றேவல் செய்யின (அதற்கு அடிமைப்பட்டு நடந்தால்) பெண் யானையை நம்பிப்போய்ப் படுகுழியில் விழுந்த ஆண் யானைக்கொப்பாவான். இந்த யோகம் செய்ய முதலாவது மனதை யறியவேண்டும். மனதை யறிந்தால் அதன் தொழிலை யறியவரும். அதன் தொழிலையறிந்தால் அத்தொழிலொழிந்த காலத்து அம்மனம் எப்படியிருக்கிறதென்று தெரியவரும். தொழிலொழிந்த மனமே ஆத்மா, அதுவே விஷ்ணு அதுவே பரமபதம். "அநாஹதஸ்ய சப்தஸ்ய" என்கிற சுருதியினால் ஹிருதயகமலத்திலிருந்துண்டாகும் சப்தத்தை யுணர்ந்து, அதினுள்ளிருக்கும் "த்வனி" யை யுணர்ந்து, அந்த த்வனியினுள்ளிருக்கும் "ஜோதியை" யுணர்ந்து, அந்த ஜோதியினுள்ளிருக்கும் மனதை யுணர்வான் யோகி. அந்த மனமே 'சிருஷ்டி-ஸ்திதி-வியஸன' காரியங்கள் எல்லாம் செய்வது! "தன்மனோவிலயம்யாதி"—அந்த மனமும் தொழிலற்று நிற்குநிலையெதுவோ அதுவே விஷ்ணுரூபமான பரமபதம். அந்த மேலான நிலையிலிருந்தால் த்ரிகாலத்தையுமுணர்ந்து நடக்கலாம். ஆனால் அது ஸ்வகாரியதுரந்தரநிலையல்ல. ஸ்ரீகிருஷ்ணபகவான் இருந்த நிலையதுவே; பார்த்தசாரதியாயிருந்து அர்ச்சுனனுக்கு உபதேசம் செய்த நிலையும், விசுவரூபதரிசனமளித்து சந்தேகப்பட்ட அவன்மனதைத்தேற்றிய நிலையும், அவனைத்தேற்றி யாற்றி யுத்தம் செய்யும்படி தூண்டியபின் அவனுடைய தேருக்கு சாரதியாகவிருந்து சாரத்தியம் செய்த நிலையும் அதுவே. காலநிலையும் கர்மஸ்வபாவமும் அறிந்து நடக்கும் நிலையதுவே. இந்த உண்மையைப் போதிக்க ஏற்றதோர் சமயமாக அவர் மேற்கொண்டது யுத்தமுகத்தில் அர்ச்சுனன் கைவில்லை நழுவவிட்டுச் சோகித்த சமயமே. அந்தச் சமயத்தில் செய்த உபதேசம் ஆத்மோபதேசமானாலும் ஒவ்வொருபதேசத்தின் முடிவிலும் "நீ சோகம் தீர்ந்து சண்டைசெய்யகடவாய்!" என்று அர்ச்சுனனை அவன் கடமையைச் செய்ய வற்புறுத்தினர். மஹாபாரத யுத்தத்திலும் மேலான ஜீவனயுத்தம் செய்ய நாமெல்லாம் யுத்த சந்நத்தர்களாகவிருக்கிறோம். அர்பத்நட் கம்பெனியின் பேரும், கீர்த்தியும், சூழ்ச்சியும், வீழ்ச்சியும் அவற்றால் வந்த கேடுகளும் கௌரவ சேனைகளைப்போல் எங்கும் பரவி நிற்கின்றன. இந்த சமயத்தில் அர்ச்சுனனைப்போல் யுத்தம் செய்ய வேண்டியவர்கள் நாமெல்லாரும். அர்பத்நட் கம்பெனி முழுகிப்போன செய்தி கேட்டபோது கையிருப்பு ரொக்கம் 6-அணா. அதையும் வண்டிச்செலவுக்குக் கொடுத்து அர்பத்நட் முழுகிப்போனது மெய்யோ பொய்யோவென்று பார்த்துவரச் செலவுசெய்துவிட்டோம். அகஸ்மாத்தாகக் கையிலிருந்த செக்குகள் (அர்பத்நட் கம்பெனி செக்குகளாயிருந்தால் திண்டாட வேண்டியதுதான்) சிலவற்றை உடனே மாற்றினதால் ரூ. 30-கிடைத்தது. சென்ற 5-6-வருஷங்களாக மனதை யடக்குவதில் முயற்சித்து வந்ததால் மனோலயம் சித்தித்த காலத்தில் இந்த விபத்து நேரிட்டது ஒரு தெய்வானுகூலமே. மேலும் சென்ற சில வருஷங்களாகச் சந்தா சரியாக வசூல் செய்யப்படாமல் பாக்கி விழுந்திருந்ததும் ஒரு அனுகூலமாயிற்று. இந்த பாக்கித் தொகையைக் கொண்டே நாம் தற்காலஜீவனம்செய்து பத்திரிகையையும் மேல் நடத்த வேண்டியிருக்கிறது. இது விஷயமாக, ஆத்மஸம்யமயோகத்திலிருக்கும் ஒரு ஆப்தரிடமிருந்துவந்த ஆப்தவசனத்தை மேற்கொண்டு அதனுண்மை விளங்க இவ்வளவுதூரம் எழுதலானேம். அதிலிரண்டொரு வசனம் மட்டும் இங்கெடுத்துரைக்கற்பாலது......" உனது

ஆத்மானந்தம் முன்னிருந்தபடியே இப்பொழுதுமிருக்கிறது. மலை கலங்கினலும் உன் மனம் கலங்காது என்பது என்னுடைய நிச்சயம். கண்ணே! உன் நிலை தவறாது இருக்கக் கடவாய். பேப்பர் போடுவதை நிறுத்தாதே... உன்மனதிலேயே தைரியத்தைக்கொண்டு திருப்தியாக இரு. "ஏது வந்தாலும் ஏதொழிந்தாலும் எனது யான் என்றோர்கள் போதநிலை கண்ட புலத்தோர் பராபரமே" என்பதுபோல் நீ ஒன்றுக்கும் கவலைப்படாதே. துக்க சுகம் மனதுக்கேயொழிய உனக்கில்லை. நீ மனதல்ல. மஹத்தே. ("நீ மனமென்னும் பேர் நீங்கி மஹத்தென்னும் பேர்கொள்" என்பதைப் பார்க்க இதன் மர்மம் விளங்கும்.) புஸ்தகத்தில் எழுதியிருக்கும் யோகத்தை வாசித்து அதில் பிரவிருத்திக்காதே. உன் அனுபவத்துக் கேற்றதானபடி செய். ஆனந்தமாயிரு. குழந்தைகளை ஆதரவோடு காப்பாற்று." இது நமக்குமட்டும் சொன்னதல்ல. சஞ்சலமனமற்ற ஸ்திரபுத்தியுள்ள எல்லாருக்கும் சொன்னதாக மதிக்கவேண்டியது. "உயிர்ப்பறிகொடுத்துப் பொறுத்தாலும் பணப்பறி கொடுத்துப் பொறுப்பது கஷ்டம்" என்றாள் அர்பத்நட் முழுகிபபோனதால் அவஸ்தைப் பட்ட ஒரு அம்மை. பணப்பறிகொடுத்தாலும் பக்திப் பறிகொடுக்காமலிருந்தால் ஈசுவர கிருபையால் எல்லாம் அவரவர்கள் கர்மவசம்போல் சரியாகவரும். இது ஒன்றைத் தவிர வேறு எந்த ஆறுதலும் சொல்வது இந்த சமயத்தில் சாத்தியமாகவில்லை.

---

## THE ROTTEN STATE OF THE ARBUTHNOTS-A GLOOMY PICTURE.

### THE PAST UNVEILED.

## அர்பத்நட் கம்பெனியின் ஊழல்கள்.

"ஊரான்வீட்டுநெய்யே என்பெண்டாட்டிகையே!"

"செத்தால்தெரியும் செட்டியார்வாழ்வு" என்று தமிழில் ஒரு பழமொழிசொல்வதுண்டு. வியாபார மினுக்குகளும் டம்பங்களும் வெளிவேஷங்கள் என்பது இதன்பொருள். செட்டியாருள்ளமட்டும் எப்படியோஎல்லாம் வழக்கம்போல் ஏறத்தாழ நடந்துவரும். பிசகுகள்நேர்ந்தால் ஆட்டைத்தூக்கி மாட்டில்போட்டு, மாட்டைத்தூக்கி ஆட்டில்போட்டு எப்படியோ கணக்குகளை குட்டுத்தெரியாதபடி குழப்பி செட்டியார் காரியத்தைப் பார்த்துக்கொண்டு போய்விடுவார் என்பது ஜனங்களுடைய அபிப்பிராயம். "செட்டியார்" என்பது பொதுவாய் வியாபாரம், லாவாதேவி வகைராவுக்கு அத்தொழில்செய்யும் வருணத்தாரையொட்டி வந்தபேர். இந்தப் பழமொழிப்படியே அர்பத்நட் கம்பெனி படுத்துக் கொள்ளவும் அவர்கள் ஊழல்களெல்லாம் வெளிவாலாயிற்று ஐயோ! இப்படியும் படுமோசம் செய்வாருண்டா! அல்லது, ஆயிரக் கணக்கான ஜனங்கள் தோட்டி முதல் தொண்டமான் வரையில் உள்மர்மம் உணர்ந்து கொள்ளாமல் வெளிப்பேரையும் டம்பத்தையும் நம்பி இப்படி ஏகமாய் மோசம்போவார்களா! அவர்களைப்போல் 'கெட்டிக்காரர்களும்' பார்த்ததில்லை! நம்மைப்போல் இளிச்சவாயன்களையும் பார்த்ததில்லை. இந்த நவம்பர்மீ 17-உ சனிக்கிழமையன்று அர்பத்நட் கம்பெனி முழுகிப்போனதின்பேரில் அவர்களுக்கு 'பாப்பர் சேர்டிபிகேட்டு' கொடுக்குமுன் அவர்கள் சொத்தையெல்லாம் ஒப்புக்கொண்டு கடன்காரர்களுக்காக அவைகளை 'மேல்விசாரணை செய்துவர நியமிக்கப்பட்ட கோர்ட்டுத்தியோகஸ்தராகிய அபிஷியல் அஸைனி (மிஸ்டர் ஆர்ச்சிபால்ட் ரீட் அவர்கள்) 25-நாள்களாக அர்பத்நட் கம்பெனியின் கணக்குகளையாராய்ந்து ஆதாயம் விரயம் என்னவென்றும், அவர்கள் சொத்து என்ன, கடன் என்னவென்றும் ஒருவாறு மதிபிட்டுக்கண்டுபிடித்ததைக் கடன்காரர்களுக்கு வெளியிட்டார். சுமார் 1000 பேர்களுக்குமேல் கடன்கார்கள் வந்திருந்தார்கள். அவர்கள் கூட்டம் விக்டோரியா பப்ளிக்ஹால் நிறையக் கூடியிருந்தது. அப்பொழுது அவர் அர்பத்நட் கம்பெனியார் வாழ்வை வெளியிட்டுச் சொன்னார்: இந்தக் கம்பெனி ஏற்பட்டு 106 வருஷகாலமாகிறது. இது தலைசாயத் துவக்கினது எப்போவென்று பார்க்க, 20-வருஷத்துக்கு மேலாக இவர்கள் வாழ்வைப்பற்றி விசாரிக்கவேண்டியதாயிருந்தது. 1760-65ல் மிஸ்டர் மாக்பெடின் என்பவர் இந்தியாவில் இந்த கம்பெனியில் ஒருபங்காளியாகவிரு

ந்தார். அவர் ஒரு தம்படிகூட கைம்முதல் போடவில்லை. 1871-ம் வருஷத்தில் ஸர் ஜார்ஜ் அர்பத்நட் பங்காளியாகச் சேர்ந்தார். அவரும் ஒரு தம்படிகூட முதல் போடவில்லை. அவருடைய தகப்பனாருக்குப் பின் வார்சாகவந்து சேர்ந்தார்போலும் என்று மழமழப்பாய் உண்மையை உள்ளபடி யாராய்ந்துணராக் காமல் மழுப்பினார். பிறகு மாக்கென்ஸியென்று ஒருபங்காளியிருந்தார். அவரும் ஒருதம்படிமுதல் போடவில்லை. இவர் 1886-ம் வருஷத்தில் கம்பெனியை விட்டுப்போய்விட்டார். அவர் போனபிறகு இரண்டு மூன்று வருஷங்களுக்குமுன் இறந்துபோன மிஸ்டர் வி. வான்ஸ்அக்நுவும், மிஸ்டர் ரெஜிநால்ட் அர்பத்நட்டும் பங்காளிகளாக வந்து சேர்ந்தார்கள். அப்பொழுது இந்தியாவில் பங்காளியாகவிருந்த மிஸ்டர் மாக்பெடின் சீமைக்குத் திரும்பிப்போகவிரும்பி அங்கேயொரு கம்பெனி இதையொட்டினதாக ஏற்படுத்தினார். அந்தக் கம்பெனிக்குத்தான் மாக்பெடின் அண்டு கம்பெனியென்று பேர். அந்தக் கம்பெனி லண்டனில் ஏற்பட்டதுமுதல் அர்பத்நட் கம்பெனிக்கு நாசகாலம் தொடங்கிற்று. அதாவது 1887-ம் வருஷம் முதற்கொண்டு இதற்குச்சாயுங்காலம் ஏற்பட்டது. இத்தனைபேர் பங்காளிகள் வந்து சேர்ந்ததில் ஒருவரும் ஒருதம்படி இந்தக்கம்பெனியில் கைம்முதல் போடவில்லையாம். ரெஜிநால்ட் அர்பத்நட் என்பவர் சிலகாலஞ் சென்றபின் மாசம் 50-பவுன் (750ரூபாய்) பென்ஷன் பெற்றுக்கொண்டு நீங்கிப்போனார். இப்பொழுது தற்கொலை செய்துகொண்டிறந்த மாக்பெடின் லண்டன்ஹவுஸ் ஏற்படுத்தினதுமுதல் அர்பத்நட் அவுஸுக்கு சனியன் பிடித்ததென்று சொன்னோம். இவர் ஒருதம்படிகூட கைம்முதல் போடாவிட்டாலும் இந்தியாவிலுள்ள அர்பத்நட் அவுஸில் ஜனங்கள் போட்டுவைக்கும் பணத்தைக்கொண்டு, ஆழம்பார்க்காமல் கண்டபடியெல்லாம் துணிந்து வியாபாரஞ்செய்யத் துவக்கினார். அதற்குப்பேர் 'வியாபாரம்' என்று சொல்வது உபசார வசனமே. உண்மையில் அவர் சூதாடுபவர் போல் பணத்தைக் கண்டபடி கண் மூடிக்கொண்டு செலவழிக்கலானார். இப்படியெல்லாம் அடாபிடி வியாபாரம்செய்து லண்டன் அவுஸ் ஏற்பட்ட 6-வருஷங்களுக்குள் அதவாது (1893-ம் வருஷத்துக்குள்) 60-லக்ஷம் நஷ்டம் வைத்துவிட்டார். முதலாவது அமெரிக்காவிலுள்ள மேலிந்தியாத் தீவுகளில் கரும்புத்தோட்டங்களில் ஏராளமாய்ப் பணத்தைப்போட்டு முதலையிழந்தார். பிறகு ஜாவாவில் தட்டுக்கெட்ட வியாபாரம்செய்து பெருமுதலழித்தார். 1890-ல் அல்லது அடுத்த வருஷத்தில் அமெரிக்காவில் ஏராளமாய் ரயில்கள் வாங்க யத்தனித்து பெருமுதலிழந்தார். இதனால் 1892-ம் வருஷத்தில் பெருத்த நஷ்டம் நேர்ந்தது. இப்படியாக 1893-ம் வருஷத்துக்குள் 60-லக்ஷத்துக்குமேல் முதல்தொகையில் நஷ்டம் வரச்செய்துவிட்டார். இவர் இப்படி இந்தியர்கள் பணத்தை வாரியிறைத்துவிளையாட இந்தியாவிலுள்ள பங்காளிகள் சும்மாவிருக்கவில்லை. அவர்கள் காபித்தோட்டங்களில் கணக்குப்பாராமல் பணத்தை வாரியிறைத்துப் பெரு நஷ்டப்பட்டார்கள். நீலச்சரக்கு வியாபாரத்தில் இவர்களுக்கு நேர்ந்த நஷ்டமும் பெருமிதமானதே. உப்பு வரியை மாற்றினதில் இவர்களுக்கு வந்த நஷ்டமும் சிறிதல்ல. பின்னிரண்டு தலைப்பிலும் இவர்கள் வியாபாரம் முழுநஷ்டமாகவே முடிந்தது. காப்பித்தோட்டம் இப்பொழுது 15-லக்ஷத்துக்கு இருக்கிறதாகச் சொல்கிறார், ஆனால் இன்றைத்தேதியில் அவைகளை விற்றால் 15,000 ரூபாய்கூட வராது என்கிறார்கள். அன்றி, தென்னாபிரிகாவில் போவர்யுத்தம் நடந்தபொழுது இவர்கள் உண்டிப்பத்திரங்கள் வாங்கிவிற்றதில் 3-லக்ஷம் நஷ்டமடைந்தார்களாம். இவர்கள் ஆதியில்துவக்கிய ஏற்றுமதி இறக்குமதி வியாபாரம் மட்டும் செய்துவந்தால் இந்தக்கதி வந்திராது. துரியோதனனுக்கு சகுனி வாய்த்ததுபோல, நம்மவர் துரதிர்ஷ்டம் இந்தக் கம்பெனியாருக்கு மிஸ்டர் மாக்பெடின் வாய்த்தார். ஸர் ஜியார்ஜ் அர்பத்நட்டும் சும்மாவிருக்கவில்லை. அவரும் தன்னாலான மட்டும் நமது பணத்தை லக்ஷியமின்றியே துணிந்து கண்டபடி வாரியிறைத்து "வியாபாரம்" செய்துவந்தார். பங்காளிகளுக்குள் ஒருவராவது ஒருதம்படி முதல்போடவில்லையென்று முன் சொன்னோம். ஆனால் இவர்கள் பங்குக்கு விழுந்தலாபம் நஷ்டம் இதுகளுக்குக் கணக்குண்டோவென்றால் அதுவுமில்லை. 1897-ம்வருஷம் முதற்கொண்டு பங்காளிகள் கணக்குப்புஸ்தகம் கையாடப்படவேயில்லையாம். ஆகையால் இந்த அதிசய வியாபாரக் கம்பெனியில் ஆதாயவிரயம் பங்காளிகள் கணக்கில் இன்னதென்று ஒன்றும் ஏற்படவேயில்லை. கணக்கே வைக்கப்படவில்லையென்றால் அப்புறம் ஏற்படுகிறதென்ன! ஆனாலும் இபபொழுது ஆதாயவிரயங்களைக் கணக்குப்படி ஆராய்ந்து பார்த்ததில் 1898-ம் வருஷம்முதல் வருஷாவருஷம் நஷ்டமேயென்று தெரியவருகிறது. நஷ்டம் லக்ஷக்கணக்காக நேரிட்டிருக்க 1899-ம் வருஷத்தில் 74-ஆயிரமும் 1904-ம் வருஷத்தில் 2504 ரூபாயும்மட்டும லாபம் தேறினதாகத் தெரியவருகிறது. மற்ற வருஷங்களிலெல்லாம் லக்ஷம் லக்ஷமாக நஷ்டம் நேர்ந்திருக்கிறது. 1905-ம் வருஷத்தில் 2-லக்ஷத்துக்குமேல் நஷ்டம். இந்த விவரங்களை 'ஆடிடர்கள்' ரிபோர்ட்டில் கண்டுகொள்ளலாம். 3-4 வருஷங்களுக்கு முந்தி மிஸ்டர் மாக்பெடினும் ஸர் ஜியார்ஜ் அர்பத்நட்டும் சேர்ந்து அவர்களை நம்பி அவர்களிடத்தில் பணம் கட்டிவைத்தவர்கள்பணத்தைக்கொண்டு இன்னம் ஏதோ சூது வியாபாரம் செய்தார்களாம். அது இன்னதென்று விவரம் ஏற்படாவிட்டாலும் அதனால்வந்தநஷ்டம் 3-லக்ஷம் என்று தெரியவருகிறது. இப்படியாக இந்த மகாநாணயவியாபாரிகள் சென்ற 20-வருஷங்களாக கைம்முதல் ஒன்றும் போடாமற்றானே "ஊரார் வீட்டு நெய்யே என்பெண்டாட்டி கையே" என்கிற பழமொழிபோல் ஏழை யெளியவர்கள் முதல் ராஜாக்கள் மஹாராஜாக்களிருக

இவர்களை நம்பிக் கொடுத்த தொகையை 100-க்கு 5-வட்டி கொடுக்கிறோமென்று ஆசைகாட்டி இப்படி மோசச் சூதாடி வந்திருக்கிறார்கள். இந்தமகாபுண்ணிய சாலிகள் தான் தென்னிந்தியாவைமுன்னுக்கு வரச்செய்தவர்களாம். நிற்க. "அர்பத்நட்ஸ் இண்டஸ்டிரியல்ஸ்" என்று இவர்கள் 4 தொழிற்சாலைகளேற்படுத்தியிருக்கிறார்கள். அதில் ஒன்று கோணிச்சாக்குகள் நெய்யும் யந்திரசாலை. இது ஒன்று மாத்திரம் லாபம் வரும்படி வேலைசெய்து வருகிறதாம். சிமிடிச் சுண்ணாம்பு செய்யும் வேலைச்சாலைகள் சென்னையிலொன்று கல்கத்தாவிலொன்று இருக்கிறது. இவை லாபமின்றி நஷ்டப்பட்டு வேலை செய்துவருகிறதாகத் தெரியவருகிறது. 'ரிலையன்ஸ் பௌண்டிரி' (Reliance Foundry) என்று இரும்பு உலோகங்கள் உருக்கிவார்க்கும் சாலையொன்றிருக்கிறது. அதுவும் அப்படியே என்று தெரியவருகிறது. இவைகளைத்தவிர நெல்லுக்குத்தும் யந்திரசாலைகள் இரண்டு இருக்கிறதாம். அதிலும் லாபமில்லையென்று தெரிகிறது. இந்த யந்திரசாலைகள் 25-லக்ஷம் பெறுமென்று மதிப்பிட்டிருக்கிறார்கள். இது பேப்பர் மதிப்பு. இதில் பாதியும் விற்றுமுதலாகித் தேறாது என்று தெரியவருகிறது. அன்றி இவைகளின்பேரில் கடன்வாங்கியிருப்பதால் அந்தக் கடன்காரர்களுக்குக் கொடுக்கவேண்டியதைக் கொடுத்தபின் ஒன்றுமே மிஞ்சாது என்று தோன்றுகிறது. காபித்தோட்டம் 15-லக்ஷம் மதிப்புப் போட்டிருக்கிறது. இதிலும் ஒரு காசும் இப்பொழுது விற்றுமுதலாய் கைக்கு வாராது. பங்காளிகளும் அவர்கள் மானேஜர்களும் 9-லக்ஷம் அதிகப்படி பணம் பற்றியிருக்கிறார்கள். இதற்கு வருவாய் இல்லை. இப்படியாக உறுப்படாத சொத்துக்களாக 70 லக்ஷத்துக்கு மதிப்பிட்டிருக்கிறார்கள். இதற்குக்கடன் தொகை இந்தியாவில் மட்டும் 2 கோடியே சொச்சம். இங்கிலாந்திலுள்ள கடனையும் சேர்த்தால் 2¾ கோடியாகிறது. மற்றக் கொதுவைகளையும் சேர்த்தால் 3½க்கோடியாகிறது. அபிஷியல் அஸைனி சொன்ன கணக்கைக்கொண்டு பார்த்தாலும் ரூபாய்க்கு 2 அணாவும் வருவது கஷ்டமாகும். ஆனால் பேப்பரில் அழகாய் எழுதப்பட்ட கணக்குப்படி கையில் காசு கிடைப்பது கஷ்டம். அந்த சொத்துக்களை விற்கத் தலைப்பட்டால் ஒன்றுக்குப்பாதிகூடத்தேறாது. சுண்டைக்காய் கால்பணம் சுமைகூலி முக்கால்பணமென்று அர்பத்நட் அவுஸ் மகாபெரிய அவுஸ் என்று அவர்கள் நாணயத்தை நம்பிக்கொடுத்தவர்களுக்கு ஜீவாதாரமாயிருந்த கைப்பொருள் போனதோடு அவர்கள் சொத்தைப் பிடித்து விலைப்படுத்த முயலுவதில் கைப்பொருள் நஷ்டம்வரும் போலிருக்கிறது. ஏனெனில் கோர்ட்டு நடபடிக்கைகள் நடத்துவதில் எவ்வளவோ செலவாகும். அபிஷியல் அஸைனிக்கு கமிஷன், ஸ்பெஷல் அஸைனிகளுக்கு கமிஷன், இன்னும் சில்லரைவேலைகள் செய்யதாவுகாரர்கள், சிப்பந்திகள் சம்பளம் கூலி இவையெல்லாம் போக கடன்காரர்களுக்கு அவர்கள் பட்ட கஷ்டம்தான் மிஞ்சும்போலிருக்கிறது. இப்படி லக்ஷம் கோடியாகப் பணத்தை வாங்கிக்கொண்டு, நம்பினவர்களை மோசம்செய்து சந்தியில் விடுவதுதானா வியாபார நாணயம்! எல்லாம் அநுகூலமாகவிருந்தால் ரூபாய்க்கு ஒரு அணாவாவது கிடைக்காமற் போகுமாவென்று சிலர் சொல்கிறார்கள். ஐயோ! இந்தப் பணத்தைத்தேடி பெங்காளக்குடாக்கடலில் போட்டிருந்தாலும் அலைகள் கரையில் கொண்டுவந்து தள்ளினதைக்கொண்டு ஏழைகள் பிழைப்பார்களே! இப்படி ஒன்றுக்கும் பிரயோஜனமின்றி மேல் லோகத்திலும் கீழ்லோகத்திலும் சூது வியாபாரம்செய்து தோற்றுவிட்டு 20-வருஷங்களாக வாயைத் திறவாமலும் கணக்கைப் பாராமலும் கோடீசுவரன்போல வசித்துவிட்டு கடைசியில் கடன்காரர்களுக்கு கையை விரித்துவிட்டார்களே! என்று ஏழை ஜனங்கள் எங்கும் சொல்லிப் பரிதவிக்கிறார்கள். இந்த வயிற்றெரிச்சல் வீண்போகுமாவென்று சிலர் குமுறுகிறார்கள். "இராஜாங்கம் இப்படியும் போகுமா!" என்று சிலர் திக்பிரமைகொண்டு நிற்கிறார்கள். இராஜாங்கத் தலைவரிடம் ஜனங்கள் முறையிட்டதற்குக் கோர்ட்டிருக்கிறது பார்த்துக்கொள்ளுங்கள் என்று விட்டாராதலால் "கெட்டவனுக்குப் பட்டதறுதி" யென்று நம்மவர்கள் இப்பொழுது பட்டதை மனதில் உறுதியாகக்கொண்டு இனி உஷாராகப் பிழைக்கவேண்டியது தான். இப்படி கடன்காரர்களை மோசம் செய்து 'பாப்பர் ஸெர்டிபிகேட்' கேட்டால் கொடுக்கலாமா என்கிறார்கள் சிலர். அதைப்பற்றி இப்பொழுது பேசத் தருணமில்லை. கோர்ட்டார்முன் கேஸ் விசாரணையிலிருக்கையில் ஏதும் சொல்லக்கூடாது. இது சட்ட விரோதமாம். பிரிடிஷ் நாணயம்தான் இப்படியாயிற்றே! பிரிடிஷ் நியாயம் எப்படியோ பார்ப்போமென்கிறார்கள் தெரிந்தவர்கள்.

## VARAHOPANISHAD.

# வராகோபநிஷத்.

### ௪-வது. அத்தியாயம்.

பின்னும் ரிபுவாகிய பகவானை நிதாகர் என்பவர் ஜீவன்முக்தி லக்ஷணத்தைச் சொல்லுமென்று கேட்டார். அவர் அப்படியே ஆகட்டுமென்று சொன்னார்:—

ஏழுபூமிகளிலே ஜீவன் முக்தர்கள் நான்கு வகையார். சுபேச்சையென்பது முதலாவது பூமிகையாகவாகிறது. விசாரணை இரண்டாவது, தநுமானவீ மூன்றாவது, ஸத்துவாபத்தி நான்காவது, அஸம்ஸக்தி ஐந்தாவது, பதார்த்தபாவனை ஆறாவது, துரீயகா ஏழாவது. பிரணவ சுவரூபமான பூமிகையானது அகார, உகார, மகார, அர்த்தமாத்திரா சுவரூபமாயிருக்கிறது. அகாராதிகள் ஸ்தூலசூக்ஷ்ம பீஜசாக்ஷி பேதத்தினாலே நான்கு வகைப்பட்டவைகள். அவைகளின் அவஸ்தை ஜாக்ரத் சுவப்ன சுஷுப்தி துரிய மென நான்கு. அகாரஸ்தூலாம்சத்தில் ஜாக்ரனாயிருப்பவனுக்கு விசுவனென்று பெயர். சூக்ஷ்மாம்சத்தில் அவன் தைஜஸனென்று சொல்லப்படுகிறான். பீஜாம்சத்திலவன் பிராக்ஞனென்று பெயரையுடையவன். சாக்ஷியம்சத்திலவன் துரியன்.

உகார ஸ்தூலாம்சத்தில் சுவப்னாவஸ்தையையுடையவன் விசுவன். சூக்ஷ்மாம்சத்தில் அவன் தைஜஸன். பீஜாம்சத்திலவன் பிராக்ஞன். சாக்ஷி அம்சத்திலவன் துரியன்.

மகார ஸ்தூலாய்சத்தில் சுஷுப்தன் விசுவன். சூக்ஷ்மாம்சத்திலவன் தைஜஸன். பீஜாம்சத்திலவன் பிராக்ஞன். சாக்ஷியம்சத்திலவன் துரியன்.

அர்த்தமாத்திரா ஸ்தூலாம்சத்தில் துரியன் விசுவன். சூக்ஷ்மாப்சத்திலவன் தைஜஸன். பீஜாம்சத்திலவன் பிராக்ஞன். சாக்ஷியம்சத்திலவன் துரிய துரியன்.

அகாரத்தினுடைய துரீயாம்சம் ஒன்றிரண்டு மூன்று பூமிகைகள். உகாரத்தினுடைய துரீயாம்சம் நான்காவது பூமிகா, மகாரத்தினுடைய துரீயாம்சம் ஐந்தாவது பூமிகா. அர்த்தமாத்திரா துரீயாம்சம் ஆறாவது பூமிகா. இதைக்கடந்ததே ஏழாவது பூமிகா.

(முதல்) மூன்று பூமிகளில் சஞ்சரிக்கிறவன் முமுக்ஷுவாகிறான். நான்காவது பூமியில் சஞ்சரிக்கின்றவன் பிரம்மவித்தாகிறான். ஐந்தாவது பூமியில் சஞ்சரிக்கிறவன் பிர்மவித்வானாகிறான். ஆறாவது பூமியில் சஞ்சரிக்கிறவன் பிர்ம்மவித்வரீயானாகிறான். ஏழாவது பூமியில் சஞ்சரிக்கிறவன் பிர்ம்மவித்வரிஷ்டனாகிறான்.

இதைக்குறித்து சுலோகங்களிருக்கின்றன. (அந்தச் சுலோகங்களின் அர்த்தம் அடியில் வரையப்படுகிறது).

"சுபேச்சையானது முதலாவது ஞானபூ
"மியாகச் சொல்லப் பட்டிருக்கிறது. விசா
"ரணையானது இரண்டாவது. தநுமானவீமூ
"ன்றாவது. சத்துவாபத்தி நான்காவது. அத
"ற்குப்பிறகு அஸம் ஸக்தி ஐந்தாவது. பதா
ர்த்தபாவனை ஆறாவது. துரியகா ஏழாவது".

நான் மூடனாகவே யிருக்கட்டுமா? சாஸ்திரங்களினாலேயும் சத்துக்களான ஜனங்களினாலேயும் பார்க்கிறேனென்று (இனி நான் மூடனாக விருக்கக்கூடாது. சாஸ்திரங்களுடையவும் சத்துக்களான ஜனங்களுடையவும் அனுக்கிரகத்தை அடைய முயலுகிறேனென்று) வைராக்கிய பூர்வமாயுண்டாகிற இச்சை சுபேச்சை யென்று ஞானிகளால் சொல்லப்படுகிறது. சாஸ்திர சத்ஜன சேர்க்கையும் வைராக்கியாப்பியாச பூர்வமான சதாசாரப்பிரவிருத்தியும் விசாரணையென்று சொல்லப் படுகிறது. விசாரணை சுபேச்சை இவைகளினாலே இந்திரிய விஷயங்களிலே எவ்விடத்தில் ஆசைகுறைகிறதோ அந்தபூமிகா தநுமானவீ என்று சொல்லப்படுகிறது. (மேற்படி) மூன்று பூமிகளுடைய அப்பியாசத்தினாலே விஷயங்களில் வைராக்கிய முண்டாய் அதினாலே சுத்தமான சித்தமானது சத்தான ஆத்மாவிடத்திலே யிருக்கையிலே சத்துவாபத்தியென்று சொல்லப் படுகிறது. (மேற்படி) நான்கு பூமிகளுடைய அப்பியாசத்தினாலே பலாபேக்ஷையன்றியில் வேரூன்றியிருக்கிற சத்துவகுணத்தினுடைய பிரகாசமானது அஸம்ஸக்தியென்று பெயரையுடையதாய்ச் சொல்லப்படுகிறது. (மேற்படி) ஐந்து பூமிகளுடைய அப்பியாசத்தினாலே ஆத்மாவினிடத்தில் மிகவும் ரமித்துக்கொண்டிருக்கிறவனாய் உள்ளும் வெளியுமு

ள்ள வஸ்துக்களில் பாவனை (தோற்றம்) இல்லாதவும் பிறரால் ஏவபட்டால் மாத்திரம் காரியங்களில் பிரவிருத்தி யுள்ளவுமான ஸ்திதி தான் பதார்த்தபாவனை என்கிற ஆறாவது பூமிகா. ஆறு பூமிகளுடைய வெகுகாலாப்பியாசத்தினாலே (பிரபஞ்சாதி) பேதங்களற்றுப்போய் ஆத்மபாவனையிலேயே நிலைத்திருக்கிருக்கிற தெதுவோ அதுதான் துரியகாவென்கிற ஏழாவது பூமிகா. சுபேச்சை முதலுள்ள மூன்று பூமிகளும் பேதா பேதத்துடன் கூடினவைகளென்று சொல்லப்படுகின்றன. (ஏனென்றால்) ஜாக்ரத் அவஸ்தையில் எந்த ஜகத்தைப் பார்க்கிறானோ அந்த ஜகத்தை வாஸ்தவமாக புத்தியினால் அறிகிறான்.

அத்துவைதத்தில் ஸ்திரபுத்தி யுண்டானவனாய் துவைதபாவனை யடங்கினால் நான்காவது பூமிசம்பந்தத்தினாலே இந்த உலகத்தை சுவப்நம்போல் பார்க்கிறான். சிதறிப்போகிற சரத்கால மேகமானது எப்படி நாசமடையுமோ அப்படி ஜகத்து நசித்துப் போகிறது. ஓ! நிதாகா! (அப்படிப்பட்டவன்) சத்துவத்தை மாத்திரம் மிச்சமாயுடையவனாக விருக்கிறானென்று திடம்செய்து கொள். சுஷுப்திபதமென்கிற பெயரையுடைய ஐந்தாவது பூமியை ஏறி சகலவிசேஷாம்சங்களுமற்றவனாய் அத்துவைத மாத்திரமாகவே யிருக்கிறான். எப்போதும் வெளி வியாபாரங்களி லிருந்தபோதிலும் எப்போது முள்நோக்க முள்ளவனானதினாலே இந்த (ஆறாவது) பூமியிலே அப்பியாசம் செய்கிறவன் (நன்றாய் விஷயவாசனை யற்றவனாய்) சிரமமடைந்து தூங்குகிறவனைப்போல காணப்படுகிறான். பழமையானதும் கூடசுஷுப்தி என்கிற பெயரையுடையதுமான ஏழாவது பூமியானது கிரமமாயடையப்படுகிறது. எவ்விடத்தில் சத் அசத்ரூபமில்லையோ, அகங்காரமும் அநகங்காரமு மில்லையோ, (அந்த ஏழாவது பூமிகையில்) கேவலம் க்ஷீணமான மனசுடையவனாயும் பயமற்றவனாயும் இரண்டாவதற்ற ஸ்திதியிலே யிருக்கிறான். ஆகாசத்தில் சூனியமாயிருக்கிற குடத்தைப்போல் உள்ளும் சூனியமாயும் வெளியும் சூனியமாயு மிருக்கிறான். சமுத்திரத் திற்குள் பூர்ணமாயிருக்கிற குடத்தைப்போல உள்ளும் பூர்ணமாயும் வெளியும் பூர்ணமாயு மிருக்கிறான். அறிகிறவனாயும் அறியப்படுகிறவனாயும் ஆகவேண்டாம். சகல பாவனையும் தள்ளி மிச்சமான தெதுவோ (மிச்சமானது பிர்ம்மம்) அந்த சுவரூபமாகவாகக்கடவாய். பார்க்கிறவன் பார்வை பார்க்கப்படும் வஸ்து இவைகளை வாசனையுடன் தள்ளி (தர்சநப் பிரதமாபாஸம்) விளங்குகிற சிரேஷ்டமான பிரகாசமாகிய ஆத்மாவையே பஜி. பிரபஞ்ச வியாபாரமுள்ளவனானாலும் இந்தப் பிரபஞ்சமானது காணப்படாம லிருக்கிற ஆகாசம்போல் எவனுக்குக் காணப்படுகிறதில்லையோ அவன் ஜீவன்முக்தனென்று சொல்லப்படுகிறான். சுக துக்கங்களிலே எவனுடைய மனப் பிரகாசமானது உதயத்தையும் அஸ்தமயத்தையும் (சுகத்தில் பொங்குதலும் துக்கத்தில் மங்குதலும்) அடைகிறதில்லையோ, அடையப்பட்டதை * அதிக்கிரமிக்காம லிருக்கிற இருப்பை யுடையதோ, அவன் ஜீவன்முக்தனென்று சொல்லப்படுகிறான்.

சுஷுப்தியி லிருக்கிற எவன் விழித்துக் கொண்டவனாக விருக்கிறானோ, எவனுக்கு விழித்துக்கொண் டிருப்ப தென்பதில்லையோ, எவனுடைய ஞானமானது (விஷய) வாசனை யற்றதாக விருக்கிறதோ அவன் ஜீவன்முக்தனென்று சொல்லப் படுகிறான். ஆசை துவேஷம் பயம் முதலியவைகளுக்கு அநுகுணமாக நடந்தாலும் எவனுடைய உள்ளம் ஆகாசத்தைப்போல் சுத்தமா யிருக்கிறதோ அவன் ஜீவன்முக்தனென்று சொல்லப்படுகிறான். ஒரு காரியத்தைச் செய்தாலும் செய்யாவிட்டாலும் எவனுக்குத் தான் கருத்தா என்கிற எண்ணமானது இல்லையோ, எவனுடைய புத்தியானது விஷயங்களில் பற்றுகிறதில்லையோ, அவன் ஜீவன்முக்தனென்று சொல்லப்படுகிறான். எவனிடத்தி லிருந்து ஜனம் (ஜனங்கள்) பயமடைகிற தில்லையோ, ஜனங்களிடத்திலிருந்து எவன் பயமடைகிறதில்லையோ, சந்தோஷம் கோபம் பயம் இவைகளைவிட்டிருக்கிறவனெவனோ அவன் ஜீவன்முக்தனென்று சொல்லப்படுகிறான். சகல

* சுகதுக்கங்களில் எது தனக்கு நேரிட்டதோ அதது நேரிட்ட ஸ்திதியிலேயே விட்டுவிடுகிறதேயன்றி சுகத்தை விர்த்திசெய்யவாவது துக்கத்தைப் போக்கவாவது முயற்சி செய்கிறதில்லையென்பது கருத்து.

மான விஷயங்களிலும் வியவகரித்துக்கொண்டிருந்தாலும் பிறருடையவைகளில்போல (பிறருடைய வஸ்துக்களில் தனக்கு பற்றில்லாததுபோல) சீதளனும் (சாந்தனும்) பூர்ணமான ஆத்மாவாயும் (ஒருவித குறைவுமற்றவனும்) இருக்கிறவனெவனோ அவன் ஜீவன்முக்தனென்று சொல்லப்படுகிறான். ஓ முனியே! எப்போது சித்தத்திலுள்ள சகல காமங்களையும் தள்ளிவிட்டு சகலத்திற்கும் ஆத்மாவாயிருக்கிற என்னிடத்தில் திருப்தியுள்ளவனாக இருக்கிறானோ அப்போதவன் ஜீவன்முக்தனென்று சொல்லப் படுகிறான். சித்தத்தினுடைய சகல வியாபாரமுமற்ற சின்மாத்திரமே யாகிய பரமபாவனமான (மகாசுத்தமான) பதத்தில் (ஸ்தானத்தில் அல்லது இடத்தில்) எவன் கலங்காத மனதுடையவனாக இளைப்பாறுகிறானோ அவன் ஜீவன்முக்தனென்று சொல்லப்படுகிறான். எவனுடைய சித்தத்தில் இது ஜகத், நான், அவன், இவன், வாஸ்தவமல்லாத காணப்படுகிற வஸ்துக்கள் (என்றபேதம்) உதயமாகிறதில்லையோ அவன் ஜீவன்முக்தனென்று சொல்லப் படுகிறான். ஸ்திரமாயும் மகத்தாயும் பூர்ணமாயும் விஷயமற்றதாயுமிருக்கிற சத்தாகிய பிர்ம்மத்தினிடத்தில் ஆசாரியன் சாஸ்திரம் இந்தமார்க்கமாக (இவர்கள் உபதேசித்தவழியாய்) சீக்கிரமாகப் பிரவேசித்து அதில் ஸ்திரமாகவிரு.

† சிவனே குரு, சிவனே தேவன், சிவனே வேதன், சிவனே பிரபு, சிவனே நான், சிவனே சகலமும், சிவனைக்காட்டிலும் வேறொன்றுமில்லை. தீரனாகிய பிராமணன் அவனை (அந்தச்சிவனை) அறிந்து ஞானத்தை யடையவேண்டும். வெகு சப்தங்களை உச்சரிக்கவேண்டியதில்லை. அது (அப்படி உச்சரித்தல்) வாக்குக்கு வருத்தமே. சுகர்முக்தர். வாமதேவர்முக்தர். அவர்களைத் தவிர முக்தியடைந்தவர்களில்லை. (இவ்விருவருடைய மார்க்கத்தைத் தவிர முக்திக்கு வேறேமார்க்கமில்லை என்பது தாத்பரியம்). இந்த லோகத்தில் சுகமார்க்கத்தை எந்தத் தைரியசாலிகள் அனுசரிக்கிறார்களோ அவர்கள் சத்தியோ ('உடனே'—என்றால், இந்தத்தேகம் போன உடனே) முக்தர்களாகிறார்கள். இந்த லோகத்தில் வாமதேவமார்க்கத்தை யெப்போது மனுசரிக்கிறவர்கள் மறுபடி மறுபடி பிறப்பை யடைந்து சத்துவத்தோடு கூடின யோகமார்க்கங்களினாலேயும் சாங்கிய (ஞான)ங்களினாலேயும் கருமங்களினாலேயும் கிரமமுக்தர்களாகிறார்கள். சுகமார்க்கம் வாமதேவமார்க்கம் என இரண்டு மார்க்கங்கள் தேவனாலேற்படுத்தப்பட்டன. சுகமார்க்கமானது பக்ஷிமார்க்கம் (குறித்தவிடத்திற்குப் பக்ஷிகள்பறந்து போவதுபோல் இந்தத் தேகம் போனஉடனே முக்தியடைவது) என்றும், வாமதேவமார்க்கமானது எறும்பு மார்க்கம் (குறித்த விடத்திற்கு எறும்பு போகவேண்டுமானால் கிரமக்கிரமமாய் ஊர்ந்து போகிறதுபோல் இந்தத் தேகத்தை விட்டு பிறகு இதைவிட உத்தமமான ஜன்மமடைந்து அதிலிருந்து பின்னும் உத்தமமான ஜன்மமடைந்து இப்படியே பலஜன்மங்களை அடைந்து கடைசியில் பிரும்மலோகம் சென்று பிரும்மாவுடன் முக்தி அடைவது) என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. விதிவாக்கியங்களினாலேயாவது நிஷேதவாக்கியங்களினாலேயாவது மகாவாக்கிய விசாரத்தினாலேயாவது சாங்கியயோக சமாதியினாலேயாவது அசம்பிரஞ்ஞா ஸமாதியினாலேயாவது தன் ஆத்மசுவரூபத்தை யறிந்து நிர்மலமானவர்கள் சுகமார்க்கத்தினாலே பரமபதத்தை (மோக்ஷத்தை) அடைகிறார்கள். யமம் முதலிய ஆசனங்களினாலே யுண்டாகிற ஆயாசமாகிய ஹடாப்பியாசத்தினாலே (ஹடாயோக அப்பியாசத்தினாலே) அடிக்கடி அநேக தடைகளினாலுண்டான அணிமாதி (சித்தி)களுக்குட்பட்டவனாய் நல்லபலனை யடையாமல் மறுபடி நல்லகுலத்திற் பிறந்து முந்திய (ஜன்மத்தின்) வாசனையினாலேயே மறுபடி யோகாப்பியாசஞ்செய்து அநேக ஜன்ம அப்பியாசத்தினால் வாமதேவமார்க்கத்தினாலே அந்த விஷ்ணுவினுடைய பரமபதமாகிய முக்தியை யடைகிறான். பிர்ம்மப்பிராப்தியைக் கொடுக்கத்தக்கவும் மங்களகரமானவும் இந்த இரண்டுமார்க்கங்களிருக்கின்றன. இவைகளிலொன்று சத்தியோ முக்தியையும் மற்றொன்று கிரமமுக்தியையும் கொடுக்கத்தக்கது.

(சகலமும்) பிர்ம்மமென்று பார்க்கிறவனுக்கு மோகமேது? துக்கமேது? எவனுடைய புத்தியானது அனுபவத்தை முடிவாயுடையதாய (பிர்ம்ம) தத்துவத்தில் பிரவிருத்தித்

† The Eternal Principle of Goodness.

திருக்கிறதோ அவனுடைய திருஷ்டியிற் பட்டவர்களெல்லோரும் சகல பாதகங்களிலிருந்தும் விடுபடுகிறார்கள். பிர்ம்மவித்தானவனுடைய திருஷ்டியிற்பட்ட, ஆகாசத்திலும் பூமியிலும் சஞ்சரிக்கப்பட்ட சகலமானவர்களும் அநேககோடி ஜன்மங்களில் செய்த பாபங்களிலிருந்து உடனே விடுபடுகிறார்கள்.

(நான்காவது அத்தியாயம் முற்றிற்று.)

# HAMLET, THE TRANSCENDENTALIST.

(FROM SHAKESPEARE).

# ஹேமசந்திரஸிங் என்னும் ஆத்மவிசாரி.

(ஆங்கிலத்தின் மொழிபெயர்ப்பு.)

*By Sri Rajanayaki.* (ஸ்ரீராஜநாயகி.)

## நாடகபாத்திரங்கள்.

### புருஷர்கள்.

விலேசவர்மன்—உதயபுரிராஜா.
ஹேமசந்திரஸிங்—விலேசவர்மாவின் தமையனும் இறந்தபோன ஹேமசந்திரவர்மாவின் குமாரன்—பட்டத்துக்கு இளவரசன்.

புலஸ்தியவர்மா—ராஜாவின் அந்தரங்க காரியதரிசி.
ஸ்ரீராஜஸிங்—இளவரசனுடைய தோழன்.
லக்ஷ்மணஸிங்—புலஸ்தியவர்மாவின் குமாரன்.

வருணமித்ரன், கிருஷ்ணதாசன், உக்ரருத்திரப்பிரதாபன், கடோர்க்கஜசேனன், ஆலசாரிகன் } ஆலோசனை சபையோர்.

பிருகத்சேனன், மாக்கசேனன் } சேனை உத்தியோகஸ்தர்கள்.

வீரசேனன்--அரண்மனைக்காவல் சிப்பாய்.
பிரதாபஸிங்—ஜோதிபுரி ராஜபுத்ர இளவரசன்.
ராதாகிருஷ்ணன்—புலஸ்தியவர்மாவின் வேலைக்காரன்.

### ஸ்திரீகள்.

ஜோதிமஹால்—ஹேமசந்திரவர்மாவின் விதவை; ஹேமசந்திரஸிங்குக்குத் தாய்; தற்காலம் விலேசவர்மாவின் மனைவியாகிய இராணி.

உத்பலாக்ஷி—புலஸ்தியவர்மாவின் மகள்.

### இதரர்கள்.

புரோகிதர்கள், பிரபுக்கள், சேனாதிபதிகள், சிப்பாய்கள், நாடகக்காரர்கள், தூதர்கள், சேவகர்கள், தோட்டிகள், ராஜஸ்திரீகள், பெருமாட்டிகள், முதலியோர்கள்.

இறந்தபோன ஹேமசந்திரவர்மாவின் பிதிருதேவதை.

ஸ்தலம் } ராஜபுத்திர சமஸ்தானம். உதயபுரிப்பட்டணம்.

காலம்:—டில்லி சக்ரவர்த்திகளின் காலம்.

"The blessed gods in servile masks
Plied for me my household tasks."—*Emerson.*

"The World means intensely, and means good;
To find out its meaning is my meat and drink."
—*Robert Browning.*

"If you are in need of the fruit of my labour,
I am in greater need of the labour itself,
I perish of rust and rest."—*Emerson.*

2-வது காக்ஷியின் தொடர்ச்சி.

ஹேமசந்:—அம்மா, ஆட்டம் எப்படி இருக்கிறது?

ராணி:—இந்த ராஜாத்தி அதிக பூதஞ்சி பண்ணுகிறாள் என்று தோன்றுகிறது.

ஹேமசந் :—இருந்தாலும் சொன்னசொல்லை நிறைவேற்றுவாள்.

ராஜா:—கதையின் வரலாறு முழுமையும் உனக்குத் தெரியுமா? அதில் நாம் பார்க்கத் தகாத விஷயம் ஒன்றுமிராதே?

ஹேமசந்:—சே, சே! அப்படியொன்றுமில்லை. இதெல்லாம் விளையாட்டுத்தான். விளையாட்டுக்காக விஷம் கொடுப்பதுபோல் பாவனையே ஒழிய நிஜமாக ஒன்றுமில்லை. இதிலென்ன பார்க்கத்தகாதது?

ராணு:—இந்த ஆட்டத்தின் பெயரென்ன?

ஹேமசந்:—"எலிப்பொறியலங்காரம்"—அதாவது அலங்காரார்த்தமாக ஏற்பட்ட பெயர். இது பழைய காஞேஜி ராஜ்யத்தில் உண்மையாய் நடந்த ஒரு கொலையை நாடகமாக எழுதப்பட்டிருக்கிறது. ஜயபாலன் என்று ராஜாவின்பெயர். ராஜாத்தியின்பெயர் அஹல்யாபாய்—சற்றுபோனுல் தாங்களே எல்லாம் பார்ப்பீர்கள். பரம துரோகியாகிய "படவா" செய்கிற வேலைதான் இது! இருந்தாலும் நமக்கும் நம்மைப்போல் குற்றமற்ற நெஞ்சத்தவர்க்கும் பயமென்ன? குற்றமுள்ளவர்கள் தானே எழுந்துபோய் விடுகிருர்கள்.

(அனங்கபாலன் வேஷம் வருகிறது.)

இவன்தான் அனங்கபாலன், ராஜாவின் தமக்கை மகன்.

உத்பலா:—தங்களுக்குக் கதை முழுவதும் பாராமல் தெரியும்போலிருக்கிறதே!

ஹேமசந்:—இந்தக் கதைமட்டுமா? அப்பாகதை, அம்மாகதை, சிற்றப்பாகதை, உன்கதை, என்கதை எல்லாம் தெரியும் எனக்கு.

உத்பலா:—தங்களோடு பேசவேண்டாமென்று எண்ணியும் மறந்துவிடுகிறேன், என் புத்தியை செருப்பாலடிக்கவேண்டும்.

ஹேமசந்:—கண் கெட்டபிறகு சூரிய நமஸ்காரம் அவசியம்தான். என்வாயை அடக்குகிறதற்கு உன்னுலாகுமா? என்னடா தம்பி கொலைகாரா, இன்னும் தாமதம்? சீக்கிரம் உன் தொழிலுக்கு ஆரம்பி! யோசிக்காதே! நாய்வேஷம் போட்டால் குலைத்துத் தானே தீரவேண்டும்.

அனங்கபாலன்:—மனதே, பதருதே! கையே, கூசாதே! நெஞ்சே, இளகாதே! சூரியனே, மறைந்துகொள்! பக்ஷிகளே, கத்தாதேயுங்கள்! காற்றே இலைகளை அசைக்காதே! நித்திரையே, இவனை நன்ருய்க் கவர்ந்துகொள்! இப்படி வேளையும் நேரமுமே எனக்கு உடந்தையாயிருந்து உதவிபுரியுமாயின், நான் இனி தாமதிப்பது சரியோ? (தூங்குகிற ராஜாவின் கிரீடத்தை மெதுவாய் எடுத்து முத்தமிட்டு) உனக்காக நான் எவ்வளவு பாடுபடுகிறேனென்பதை யறிந்தால் நீ இனி என்னைவிட்டுப் பிரிவாயோ? விஷமே! உன் குணத்தை மறவாமல் இவன் தூக்கத்தை விழியாத் தூக்கமாகச் செய்துவிடு! (என்று சீசாவிலிருந்து விஷத்தைத் தூங்கும் ராஜாவின் காதில் ஊற்றுகிருன்.)

ஹேமசந்:—சிம்மாஸனத்தில் தானேறுவதற்காக பூந்தோட்டத்தில் தூங்கும் மாமனை மருமகன் கொன்றுவிடுகிருன். இந்தக் கதை முழுவதும் "அஸல்" ஹிந்துஸ்தானியில் அப்படியே எழுதப்பட்டிருக்கிறது உண்மையாக நடந்தது. இனி இந்தக் கொலைகாரன் எப்படி ராஜாத்தியையும் தன் வசப்படுத்திவிடுகிருன் பார்!

உத்பலா:—ராணு அவர்கள் எழுந்திருக்கிருர்!

ஹேமசந்:—என்? அதற்குள் பயந்துவிட்டாரா என்ன? நெருப்பென்ருல் வாய் வெந்துபோமா?

ராணி:—தங்களுக்கு உடம்பு என்ன செய்கிறது, சுவாமி?

புலஸ்தி:—(உரத்து) ஆட்டத்தை நிறுத்து நிறுத்து!

ராணு:—கொஞ்சம் தலைவலிக்கிறது, தீவட்டிகளை வரவழையுங்கள், அந்தப் புரத்துக்குப் போவோம்!

எல்லோரும்:—ஏ, தீவட்டி! இங்கேவா, ஏ தீவட்டி!

(ஹேமசந்திரலிங்கும் ஹரிராஜலிங்கும் தவிர எல்லோரும் போய்விடுகிருர்கள்.)

ஹேமசந்:—(தாளம்போட்டுக்கொண்டு பாடுகிருன்)

*அஸத்துராசாரசிவத்விஜோயம்*
*அமந்த்ரவத்தாய்மழையாய்ச்சொரிந்தான்:*
*பிரமித்துருத்திரன் மதிலேடுமுட்டி*
*நீரோடுகாலால் நுழையாஞ்சகார!*

என்ன சுவாமி! இன்னும் இந்தமாதிரி 10 சுலோகங்களும், நாற்பதைம்பது கீர்த்தனங்களும் பாடம்பண்ணிக்கொண்டு, ஒரு பட்டு உருமாலும் சாந்துப்பொட்டும், 'கோரா'க்கு டும்பும் தினசுவாமும் கிரீச்சு சடாவும் வைத்துக்கொண்டேனேயாளுல், என்னுடைய துர

திர்ஷ்டம் இன்னும் முற்றிப்போய் ஒருக்கால் பிழைக்க வழியில்லாமல்போனாலும், ஒரு நாடகக்காரனாகவாவது என்னைச் சேர்த்துக் கொள்ளமாட்டார்களா?

ஹரிராஜ:—அப்பவும் முதலில் அரைச்சம்பளம்தான் கொடுப்பார்கள்.

ஹேமசந்:—அவ்வளவுதானா? அப்படியானால் இந்தக்

கள்ளிக்கேனோ முள்வேலி,
சுள்ளிக்கேனோ உளிவாய்ச்சி,
பழுதைக்கேனோ பட்டுக்குஞ்சலம்,—
(இந்த—இந்தப்) படுபாவிக்கேனோ ராஜ
பட்டம்?

ஹரிராஜ:—'கள்ளி'க்கொரு 'சுள்ளி' அகப்பட்டதுபோல் 'பழுதை'க்கொரு பிராஸம் அகப்படவில்லையா?

ஹேமசந்:—அந்த தேவதை சொன்னதில் ஒரு அக்ஷரங்கூட பிசகில்லை என்று தோன்றுகிறது. என்ன நான் சொல்லுகிறது! நன்றாய் கவனித்தீர்களா?

ஹரிராஜ:—நன்றாய் கவனித்தேன்.

ஹேமசந்:—விஷம் கொடுக்கிற சமயத்தில் பார்த்தீர்களா?

ஹரிராஜ:—பார்த்தேன், பார்த்தேன்! உண்மையென்பதற்கு சந்தேகமேயில்லை, சுவாமி!

ஹேமசந்:—யாரையா, அங்கே! சூத்திரதார்! கொஞ்சம் அந்தப் புல்லாங்குழல் வாசிப்பவரை இப்படி வரச்சொல்லும்! ஏதாவது பாடச்சொல்லிக் கேட்போம்! பகவான் சொல்லுகிறார் கீதையிலே:—

"அநித்யாநிசரீராணி, பதர்விற்றுப்பணம்பறி
அஹம்த்வாஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்
[யாமிமாசுச"

யாரையா புல்லாங்குழல்—

(உக்கிரருத்திரப்பிரதாபனும் கடோர்க்கஜசேனனும் வருகிறார்கள்.)

கடோர்க்க:—நானொரு வார்த்தை பேசலாமா, சுவாமி?

ஹேமசந்:—ஐயா, ஒரு புராணம் வேண்டுமானாலும் சொல்லுங்கள்.

கடோர்க்க:—ராணா அவர்கள்—

ஹேமசந்:—என்ன, என்ன? ராணா அவர்களுக்கென்ன?

கடோர்க்க:—அந்தப்புரத்தில் சித்தம் கலங்கி மிகவும் கிலேசப்பட்டுக்கொண்டிருக்கிறார்.

ஹேமசந்:—அவர் அதற்குத்தானே பிறந்திருக்கிறார். நான் என்ன செய்யட்டும்? அவர் பெயரே அப்படி ஏற்பட்டிருக்கிறதே!

கடோர்க்க:—பித்தமதிகரித்துக் கடுங்கோபமாயிருக்கிறார்.

ஹேமசந்:—தினத்தைவிட ஒரு 'உத்தரணி' அதிகமாகக் குடித்துவிட்டாரோ? இதை எல்லாம் அவருடைய பிரதான வைத்தியரிடத்தில் சொன்னீரானால் ஏதாவது மருந்து கொடுப்பார். நான் சிகித்சைசெய்ய ஆரம்பித்தால் என் வைத்தியம் அவர் தாங்கமாட்டார்; இன்னும் கோபமதிகரிக்கும்.

கடோர்க்க:—நானொன்று சொல்லவந்தால் தாங்களென்னவோ சடசடவென்று ஆரம்பித்துவிடுகிறீர்களே! எனக்கு கொஞ்சம் பேச இடங்கொடுக்கக்கூடாதா?

ஹேமசந்:—ஆனால் நான் வாயைத் திறக்கவில்லை—சொல்லுங்கள்.

கடோர்க்க:—ராணி அவர்கள் மிகவும் வருத்தப்பட்டுக்கொண்டு எங்களைத் தங்களிடத்துக்கு அனுப்பியிருக்கிறார்கள்.

ஹேமசந்:—வாருங்கள், இப்படி நாற்காலியில் உட்காருங்கள்.

கடோர்க்க:—எங்களை இப்படி பரிஹாஸம் செய்யவேண்டாம்! தாங்கள் ஏதாவது சரியானபடி பதில் சொல்லுகிறதாயிருந்தால் பேசுகிறேன்! இல்லாவிட்டால் தங்களிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு திரும்பிவிடுகிறேன்.

ஹேமசந்:—ஐயா, என்னால் முடியாது.

கடோர்க்க:—என்ன முடியாது?

ஹேமசந்:—சரியானபடி பதில் சொல்ல! என் புத்தியே சரியானபடி இல்லையே, நான் எப்படி சரியானபடி பதில் சொல்லுவேன்? நான் சொல்லுகிற பதில்—அதாவது ராணி அவர்களுக்கு—சம்மதமாயிருந்தால் கேட்டுக்கொண்டு போங்கள், இல்லாவிட்டால் விட்டுவிடுங்கள். ஆதலால் உங்கள் சமாசாரத்

தைச்சொல்லுகிறதாயிருந்தால் சொல்லலாம். என் தாயாராகிய ராணி அவர்கள்—மேலே சொல்லுங்கள்.

கடோர்க்க:—ராணி அவர்களுக்குத் தங்கள் நடத்தை கொஞ்சமேனும் பிடிக்கவில்லையாம்—இப்படியும் நடந்து கொள்வீர்களா என்று அதிசயிக்கிறார்கள்.

ஹேமசந்:—இவ்வளவு அதிசயமான பிள்ளையைப் பெற்றவளுடைய பாக்கியமே பாக்கியம்! அப்புறம்! இந்த அதிசயத்தைத் தவிர வேறொன்றும் சொல்லவில்லையா?

உக்கிர:—தாங்கள் படுக்கைக்குப் போகுமுன் தன்னைப் பார்த்துப் பேசிவிட்டுப்போகும்படி ராணி அவர்கள் தங்களைக் கேட்டுக்கொள்ளுகிறார்கள்.

ஹேமசந்:—இன்னும் பத்துமுறை நமக்குத் தாயாராயிருந்தாலும் அவர்கள் வார்த்தையை நாம் கேட்கவேண்டியதுதான். நல்லது அப்படியே செய்வோம்—இன்னும் ஏதாவதுண்டா?

உக்கிர:—சுவாமி! முன்னெல்லாம் பள்ளிக்கூடத்தில் படிக்கும்பொழுது என்னிடத்தில் தாங்கள் சிநேகமாயிருந்தீர்களே!

ஹேமசந்:—இன்னும் அப்படியேதானிருக்கிறேன். தெருவில்போகும் குப்பைவண்டிக்காரனை வேண்டுமானாலும் கேளுங்கள்!

உக்கிர:—தங்கள் மனோவியாகூலத்துக்குக் காரணமென்ன சுவாமி? இதையெல்லாம் சிநேகிதர்களிடத்தில் சொல்லிக் கொள்ளாவிட்டால் வேறு பரிஹாரம்தான் என்ன இருக்கிறது?

ஹேமசந்:—உள்ளதைச் சொல்லுகிறேன்—எனக்கு வேறொன்றுமில்லை, இவ்வளவு பெரிய ராஜ்யத்தில் எனக்கு யாதொரு அதிகாரமுமில்லையே என்றுதான் வருத்தமாயிருக்கிறது.

உக்கிர:—அதென்ன அப்படிச் சொல்லுகிறீர்கள்! ராணி அவர்கள் தனக்குப் பிறகு தங்களுக்குத்தான் பட்டம் என்று சொல்லுகிறாரே?

ஹேமசந்:—என்னவோ சொன்னாலும்—“அம்மாள் வருவதற்கும் ஐயா சாவதற்கும்” என்றொரு கதையுண்டு.

(இரண்டு நாடகக்காரர்கள் புல்லாங்குழல்களுடனே வருகிறார்கள்.)

இப்படி ஒரு புல்லாங்குழல் கொடும் பார்ப்போம்—பேசிக்கொண்டே போவோம் வாருங்கள். மானை வலையிற் படுத்துவதுபோல் என்னை ஏன் சுற்றிச் சுற்றித் துரத்துகிறீர்கள்? உங்கள் வலையில் நான் அகப்படமாட்டேன்!

கடோர்க்க:—ஒழுங்காய்ப் பேசத்தெரியாமையினால் நான் சொல்லுவதில் தங்களுக்கு ஏதாவது குற்றமாகப் பட்டாலும், எல்லாம் தங்களிடத்திலுள்ள சிநேக பாவத்தினால் நான் சொல்லவேண்டியது கடமையாய் ஏற்பட்டிருக்கிறது.

ஹேமசந்:—அது எனக்குத் தெளிவாய் ஏற்படவில்லை—அதிருக்கட்டும், இந்தப் புல்லாங்குழலைச் சற்று வாசியுங்கள்.

கடோர்க்க:—எனக்கு வாசிக்கத் தெரியாதே!

ஹேமசந்:—பாதகமில்லை, கொஞ்சம் வாசிக்கலாம்.

கடோர்க்க:—தங்களிடத்தில் பொய்யா என்ன? எனக்குக் கொஞ்சம்கூடத் தெரியாதே!

ஹேமசந்:—இல்லை, எனக்காகச் சற்று தயவு செய்யுங்கள்: எங்கே, ஒருஸரளி!

கடோர்க்க:—எனக்கு இந்த வாத்தியத்தின் பெயர்கூடத் தெரியாது! என்னை மன்னிக்கவேண்டும்!

ஹேமசந்:—நல்லது நான் வாசித்துக் காண்பிக்கிறேன் பாருங்கள். இதிலொன்றும் கஷ்டமில்லை. பொய் சொல்லுகிறமாதிரிதான் இதுவும். இதோ இந்த ஏழு துவாரத்தையும் விரலினால் அடைத்துக்கொண்டு இந்த முதல் துவாரத்தில் மூச்சுவிடுகிறது—ஒரு ஒரு விரலாகத்திறந்தால், ஸ ரி க ம ப த நி—இவ்வளவுதான் அதன் சூக்ஷ்மம்.

கடோர்க்க:—தாங்கள் சொல்லுகிறது சரிதான். ஆனால் எனக்கு அப்பியாசமில்லை. நான் வாசிக்க ஆரம்பித்தால் காட்டுக்கத்தலாயிருக்குமேயொழிய ஸங்கீதமாயிராது!

ஹேமசந்:—பார்த்தீர்களா! இப்பொழுது நீங்கள் என்னை எவ்வளவு அற்பமாக நினைக்

கிறீர்களென்பது ஏற்பட்டுவிட்டதே! ஒரு மூங்கிற்குழலைவிட என்னைக் கேவலமாய் மதித்துவிட்டீர்களல்லவா? இந்தச் சிறு மூங்கிற்குழலை அடக்கி ஆண்டு அதன் ரஹஸியத்தைப்பேச வைக்கமாட்டாத நீங்கள் என்னை அடக்கி ஆண்டு என் மனதிலுள்ளதையெல்லாம் வெளியிடச்செய்யயத்தனிக்கிறீர்களே, அது முடியுமா? என்ன ஐயா அநியாயம்! ஒரு புல்லாங்குழலைவிட நான் கேடு கெட்டவனா? நல்லதிருக்கட்டும்! நீங்கள் சொல்லுகிறமாதிரி வேண்டுமானால் என்னைக் காட்டுக்கத்தலாய் கத்தச் செய்யலாமேயொழிய என்னிடத்திலிருந்து சரியானபடி பதில் வரவழைக்க உங்களாலில்லை—

(புலஸ்தியவர்மா வருகிறான்)

வாருங்கள், உங்களைத்தான் நினைத்தேன். போனதுபோக ஆயுசு நூறு உங்களுக்கு!

புலஸ்தி:—சுவாமி, ராணி அவர்கள் தங்களோடு பேசவேண்டுமென்று காத்துக்கொண்டிருக்கிறார்கள். தங்களை சிக்கிரம் வரச்சொல்லுகிறார்கள்.

ஹேமசந்:—அதோ அந்த மேகத்தைப் பாருங்கள், ஒட்டகம்போலில்லையா அது?

புலஸ்தி:—ஆம் என்கிறேன்! ஒட்டகம் மாதிரியே இருக்கிறது!

ஹேமசந்:—இல்லை, நன்றாய்ப் பாருங்கள், நாய்க்குட்டிபோல் தோற்றுகிறது.

புலஸ்தி:—ஆம், வாலும் காதும் நாய்க்குட்டிமாதிரிதானிருக்கிறது!

ஹேமசந்:—இப்பொழுது பாருங்கள், எருமைக் கடாவென்று சொல்லலாமோ?

புலஸ்தி:—இப்பொழுது இருக்கிற ரூபத்துக்கு அப்படியும் சொல்லலாம்.

ஹேமசந்:—நல்லது, அப்படியானால் இதோ வந்துவிட்டேனென்று என் தாயாரிடத்தில் சொல்லுங்கள்! (தனக்குள்) தங்கள் காரியம் ஆகவேண்டுமானால் என்னைப் பைத்தியக்காரனாகச் செய்வதற்கு எல்லோரும் தயாராயிருக்கிறார்கள்—இதோ வந்துவிட்டேனென்று சொல்லுங்கள்.

புலஸ்தி:—அப்படியே சொல்லுகிறேன் (என்று போய்விடுகிறான்.)

ஹேமசந்:—இத்தனை சமாசாரத்தையும் எப்படிச் சொல்லப்போகிறீர்! நல்லது நீங்களும் போய்வாருங்கள். பொழுதுவிடிந்து பேசிக்கொள்வோம் (ஹேமசந்திரனைத் தவிர எல்லோரும் போய்விடுகிறார்கள்) இப்பொழுது நல்ல நடு நிசி! பகலெல்லாம் கூச்சல் போட்டுக்கொண்டிருந்த உலகம் இப்பொழுது ஆடிப்பாடி அமர்ந்திருக்கிறது. ஹம்ஸதூளிகா மஞ்சத்தில் தூங்குகிறவனுக்கும் மாட்டுக் கொட்டிலில் தூங்குகிறவனுக்கும் தூக்கம் ஒன்றுதான். அதில் வித்தியாசமில்லை. தூங்கும்பொழுது மனிதன் எவ்வளவு நல்லவனாயிருக்கிறான்--விழித்துக்கொண்ட உடனே தானா போக்கிரித்தனத்துக்கு ஆரம்பிக்கவேண்டும்? பகலெல்லாம் என்ன இரைச்சல்! தூங்கும்பொழுது இவர்களிருக்கும் அடையாளமே தெரியவில்லையே! உலகமே பாலைவனத்தில் கூடாரமடித்த சேனைபோலத்தான் - சேனை இருக்கிறவரையில் சந்தை இரைச்சல்—கூடாரத்தைப் பிடுங்கிக்கொண்டு சேனைபோய்விட்டால் அப்புறம் பாலைவனம் எப்பொழுதும்போல் வெட்டவெளியாகவே இருக்கிறது. என்காரியத்தை முடித்துக்கொள்ள இதுதான் சரியானவேளை - இந்த வேளை தவறினாலும் வேறெந்த வேளையிலானாலும் என்சிற்றப்பனைக் கொன்றுவிட வேண்டியதுதான்— இனி தாமதிக்கக்கூடாது! என் தாய் என்னைக் கூப்பிடுகிறாள்—அதை என்னவென்றுகேட்டு அவளுக்கு நான் செய்யவேண்டியதைச் செய்துவிட்டு வரவேண்டும்—அவளை நான் கொல்லவேண்டியதில்லை! நான் பேசுகிற பேச்சில் ரோஷமுள்ளவளானால் தானே நாக்கைப் பிடுங்கிக்கொண்டு சாகும்படி செய்கிறேன். என்மனதில்மட்டும் அவளிடத்தில் தாயென்ற விசுவாசம் ஓடிப்போகவில்லை—ஆனால் நான் அதைப்பேச்சிலாவது நடவடிக்கையிலாவது காட்டிக்கொள்ளக்கூடாமலிருப்பது என் துரதிர்ஷ்டமே. (போய்விடுகிறான்)

காக்ஷி 3.

இடம்: அரண்மனையில் ஒரு அறை
காலம்:—நடு நிசி.

(ராஜு, கடோர்க்கஜசேனன், உக்கிருத்திரப்பிரதாபன் மூவரும் வருகிறார்கள்.)

ராணு:—அவனுடைய நடத்தையெல்லாம் வரவரக் கெட்டுப்போச்சுது. எனக்கு கொஞ்சமேனும் பிடிக்கவில்லை. இனி இந்தப் பைத்தியத்தை யதேச்சையாய்த் திரியவிடுதல் நமக்கு மோசத்தில்வரும் ஆதலால் நீங்கள் தயாராயிருங்கள்—அவனை உங்களோடு கூட்டி பூனுவுக்கனுப்பிவிடுகிறேன் - காலமே ஸ்ரீமுகம் தயார்செய்து கொடுக்கச் சொல்லுகிறேன் - வாங்கிக்கொண்டு போங்கள் - இனி ஒருக்ஷணம்கூட அவனை இங்கே வைத்துக் கொள்ளக்கூடாது—நாளுக்குநாள் அவனுடைய சேஷ்டைகள் விருத்தியாகின்றன.

கடோர்க்க:—நாங்களும் நாளைக்கே புறப்படவேண்டிய ஏற்பாடுகளைச் செய்கிறோம். அவ்விடத்துக்காகவே இல்லாவிட்டாலும், அவ்விடத்தில் அண்டிப்பிழைக்கிற வெகு ஜனங்களுடைய க்ஷேமத்துக்காகவாவது முன் ஜாக்கிரதையாய் இருக்கவேண்டியது கடமைதான்.

உக்கிர:—ஒரு சாதாரண எளியமனிதன் கூடத் தன்னைத்தான் காப்பாற்றிக்கொள்ள வேண்டியது கடமையாயிருக்க, ஒரு ராஜ்யத்திலுள்ள சமஸ்த - ஜனங்களின் யோக க்ஷேமத்தையும் தாங்குகிற அந்த இடத்துக்குச் சொல்லவும் வேண்டுமோ? ஒரு அரசனுக்கு ஏதாவது கெடுதி நேர்ந்தால் அது அரசனோடு போகாது - அக்கம் பக்கத்தில், ஊரில் இருக்கிறவர்களை யெல்லாம் கூடப் பிடிக்கும். சூரியனுக்கு கிரஹணம் பிடித்தால் உலகெல்லாம் இருள்மூண்டு கொள்ளுகிறதல்லவா? பரமசிவன் முதுகில் அர்ச்சுனன் வில்லாலடித்தபொழுது உலகத்திலுள்ள ஜந்துக்களுக்கெல்லாம் அந்த அடிவிழவில்லையா!

கடோர்க்க:—தூணைத்தட்டிவிட்டால் கூரைமுழுவதும் விழவில்லையா? அரசன் பெருமூச்சு விட்டால் ராஜ்யமுழுவதும் பெருமூச்சுவிடும்.

ராணு:—நல்லது சிக்கிரப்படுத்துங்கள்-வெள்ளம் வருமுன்னே அணைபோடவேண்டும்-ஆதலால் இவனை இப்படி சும்மாவிட்டுவிடாமல் அதற்குத்தகுந்த ஏற்பாடுகள் செய்வோம். நீங்கள் போய்வாருங்கள்.

கடோர்க்க } உக்கிரருத் } :—எப்பொழுதும் அவ்விடத்திய சித்தப்படி நடக்கக் காத்துக்கொண்டிருக்கிறோம். (இருவரும் போய் விடுகிறார்கள்)

(புலஸ்தியவர்மாவருகிறான்)

புலஸ்தி:—மகாராஜ்! யுவராஜா தன் தாயாரிடத்தில் பேசப்போகிறார்-அவர்கள் பேசும் அறையில் நான் ஒருபடுதாவின் மறைவில் இருந்துகொண்டு நடப்பதையெல்லாம் கவனித்து வருகிறேன். அவருடைய நடத்தையைப்பற்றி அவரை நன்றாக்கண்டிக்கும்படி ராணியாரிடத்தில் சொல்லுயிருக்கிறீர்களல்லவோ? தாங்கள் சொன்னதும் ஒருநல்ல யுக்திதான்: ஸ்திரீஜாதியானதினாலும் மேலும் தாயானதினாலும் ஒருக்கால் மனமிளகி அவரை சரியானபடி கண்டிக்காமல் இலகுவாக விட்டுவிடப் போகிறாரென்று சந்தேகித்து, அப்படிச்செய்யாமல் பார்த்துக்கொள்வதற்கு என்னைப்போலொரு மூன்றாவதுபேர் வழியை அங்கே இருக்கச்சொன்னதும் நியாயந்தான். தாங்கள் படுக்கைக்குப்போகுமுன் திரும்பிவந்து தங்களைப்பார்க்கிறேன்-அங்கே நடப்பதையெல்லாம் கவனித்து தங்களிடத்தில் சொல்லுகிறேன்.

ரா்ணு:—எனக்கு இப்படியார் செய்யப் போகிறார்கள்: மிகவும் வந்தனமுள்ளவனாயிருக்கிறேன் (புலஸ்தியவர்மா போய்விடுகிறான்)

நான் செய்திருக்கும் பாபம் பொல்லாதது-அளவற்ற தயாநிதியாகிய கடவுளுக்கே என் பாபம் ஸஹிக்கமாட்டாதது! கூடப்பிறந்த சகோதரனைக் கொல்லுகிறதென்றால் எந்த தெய்வத்துக்குத்தானடுக்கும்? என்னை மன்னிக்க வேண்டுமென்று பிரார்த்திக்கக்கூட எனக்கு வாய்வரமாட்டேனென்கிறது-இந்த பாபத்திலிருந்து விமோசனம் வேண்டுமென்றமட்டும் ஆசை இருக்கிறது-அதற்கேற்ற பிராயச்சித்தம் செய்துகொள்ள மனம்வரவில்லை-வெளியில் தெரிந்தால் வெட்கமும் துக்கமும் உண்டாகும் என்று பயமாயிருக்கிறது-பச்சாத்தாபம் மட்டுமிருந்து என்ன பிரயோசனம்! அதற்கேற்ற பரிஹாரங்களைத் தேடினாலல்லவோ பலனுண்டு! போனதுபோகட்டும், இனிமேல்பட அப்படிப்பட்ட பாபம் செய்யாமலிருப்போமென்றால், இன்னொருதரம் அதேமாதிரி சமயம் வாய்த்தால் அதேமாதிரி செய்யாமலிருக்க முடியுமென்கிற உறுதியான நம்பிக்கை உண்டாகவில்லை-இப்படிக்

கூழுக்கும் ஆசைப்பட்டு மீசைக்கும் ஆசைப்பட்டு கடைசியில் கூழையும் இழந்து மீசையும் இழந்தவனாகப்போகிறேன் போலிருக்கிறது. கடவுளைக்கருணாசமுத்திரம் என்கிறார்களே, என்னைப்போலொத்த மகாபாதகிகளுக்கு எட்டாவிட்டால் அவருடைய கருணை இருந்தென்னபிரயோசனம்? அதற்கு சமுத்திரம் என்கிறபெயர் தகுமோ? ஆனால் ஆறுநிறைய ஜலம் போனாலும் நாய்க்கு நக்கித்தானே குடிக்கவேண்டியதாயிருக்கிறது- அது நாயின் குற்றமா, ஆற்றின் குற்றமா?

“நீ எவ்வளவு பாபிகளுக்குள் கேடுகெட்ட பாபாதமனாயிருந்தாலும் உன்னை நான் கைவிடமாட்டேன்” னென்று பகவான் கீதையில் சொல்லியிருக்கிறார்-ஆதலால் நான் அவரைப் பிரார்த்தித்து மன்னிப்புக் கேட்டுக்கொள்ள வேண்டியதுதான்-ஆனால் நான் எதற்காக ஆசைப்பட்டு இந்தப்பாடம் செய்யத்துணிந்தேனோ அவ்வஸ்துக்களாகிய ராணியையும் ஸிம்மாஸனத்தையும் இன்னும் என்னுடைய அநுபோகத்தில் வைத்துக்கொண்டே எப்படி பிரார்த்திக்கிறது? அகப்பட்டுக்கொண்ட திருடன் திருட்டுப் பொருளைத் திருப்பிக் கொடுக்கமாட்டேன், என்னைமட்டும் மன்னிக்க வேண்டும் என்றால் எப்படி முடியும்? கடவுளிடத்தில் எந்தத் திருடனும் அகப்பட்டுக் கொள்ளாமலிருக்க முடியாது. நான் ஒரு கண்ஜாடை காண்பித்தால் என் ராஜ்யத்திலுள்ள நியாயாதிகாரிகளெல்லாம் என்னிஷ்டப்படி தீர்ப்பு செய்வார்கள். இந்த யுக்தி எல்லோருக்கும் மேற்பட்ட பொதுவான அந்த கடைசி நியாயாதிகாரியிடத்தில் செல்லாதே! அவரிடத்தில் உள்ளது உள்ளபடி எல்லாவற்றையும் நாமே ஒப்புக்கொள்ளவேண்டியிருக்குமே ஒழிய ஒன்றையும் மறைக்க முடியாது. நமக்குவிரோதமாகப் பிறர்யாரும் சாக்ஷி சொல்லவேண்டிய அவசியமில்லை. நம்முடைய வாய்மொழியைக் கொண்டே தான் நமக்கு தண்டனை! நாம் யாருக்குந்தெரியாதென்று நினைத்திருந்ததை நேற்றிப்பப்பால் இந்த ஹேமசந்திரன் எப்படியோ கண்டுபிடித்துவிட்டானே. இதை கடவுளிடத்தில் எப்படி ஒளிக்கிறது! நல்லது பச்சாத்தாபப் படுவோம் என்றால், மனமுருகினாலல்லவோ பச்சாத்தாபமாகும்! சொல்லாமலே வாய்துடிப்பதன்றி வேறில்லை ஓகோ,நாம் வகையாய் மோசம் போனோம்! கிணறு வெட்ட பூதம் புறப்பட்டதுபோல நாமென்னமோ சுகமனுபவிக்கக் கருதி ஒரு காரியத்தைச்செய்ய,நாம் தேடிய சுகமில்லாமல், அதற்குபதிலாக நாம்தேடாத மனோசஞ்சலங்களும், தூக்கமின்மையும், பயங்கரமான கனவுகளும், முகத்தில் பிரமஹத்தியின் கோரமும், ராஜ்யபாரமும் இளவரசனுடைய துவேஷமும், எல்லாரிடத்திலும் பொதுவாய் ஒரு பயமும், அவள் மனம் கோணாமல் நான் நடந்து கொள்ளவேண்டிய ஒரு ராணியும்,புற்றிலிருந்து ஈசல்போல் கிளம்பிவிட்டனவே! இன்னும் என்ன எல்லாம் வரப்போகிறதோ! கடவுளே, இந்த முள்மேல் நிற்கு மெனக்கு நீ தான் ஒரு வழிகாட்டவேண்டும்! (என்று படுக்கை அறைக்குள் போய் விடுகிறான்.)

(ஹேமசந்திரஸிங் வருகிறான்.)

ஹேமசந்:—இப்பொழுது இவனைக் கொன்று விட்டாலென்ன? இப்பொழுது தான் உள்ளேபோய் இருக்கிறான். இன்னும் கதவைக்கூட சாத்தவில்லை. அந்தப்புரத்து சேடிகளெல்லாம் தூங்கிவிட்டார்கள், நம்மையாரும் பார்க்கிறதற்கில்லை. ஆம் பின்புறமாகப் போய் இவனை இப்பொழுதே கொன்றுவிடலாம்-ஆனால் என்தாய் என்னை அவசரமாய் வரச்சொல்லி யிருக்கிறாளே, அவளைப்பார்த்துவிட்டுக் கொல்வோமா, அல்லது கொன்றுவிட்டுப் பார்ப்போமா? இத்தருணம் தப்பினால் எத்தருணம் வாய்க்குமோ? சே! இவனை இப்படியெல்லாம் கொல்லலாமா? படுக்கைக்குப்போகு முன் ஜபம்செய்வதாக ஒருபாசாங்கு வைத்துக் கொண்டிருக்கிறான் இப்படி எல்லாம் செய்தால் சுவர்க்கத்தை எப்படி பிடித்து விடலாமென்று எண்ணிக் கொண்டிருக்கிறான். இப்பொழுது ஜபம்தான்செய்கிறானோ என்னவோ? அந்தப் பாசாங்குக்குத்தான் நாம் இடங்கொடுப்பானேன்? இப்பொழுது இவனைக்கொன்று சுவர்க்கத்துக்கா அனுப்புகிறது? எனக்குக் காசுகொடுத்தால் கூட அந்த வேலையை நான் செய்யமாட்டேன்: இவன் நன்றாய்க் குடிமயக்கத்திலிருக்கும் பொழுதாவது அல்லது ராணியோடு படுத்திருக்கும் பொழுதாவது இவனைக் கொன்றால் தான் என் மனதுக்கு திருப்தியாகும். நான் இங்கே கொடுக்கிற அர்த்த சந்திரப் பிரயோகத்தில் நேராக ரௌரவாதி நகரம்போய்ச் சேரும்படி செய்கிறேன். ஆகலால் இப்பொழுது நீ தூங்கப்பா, தூங்கு! இப்பொழுது என் தாய்க்கு வைத்தியம் செய்யப் போகிறேன்; இன்னொருதடவை உன்னிடத்திற்கு வருகிறேன்; அதுவரையில் பயப்படாதே: (என்றுபோய் விடுகிறான்.)

# MRS BRANDER—THE PIONEER OF WOMEN'S EDUCATION IN SOUTHERN INDIA.

## A Memorial Portrait at the Presidency Training School for Mistresses.

## பெண்கல்வித்துறையில் உழைத்து வழிகாட்டிய மிஸஸ்ப்ராண்டர் துரைசானி

(அவர் ஞாபகார்த்தமான உருவப்படம்)

இத்தென்னிந்தியாவில் பெண்கல்வி இப்பொழுது கூடியவரையில் விருத்தியாகியிருக்கிறது. இன்னும் விருத்தியாக வேண்டியது எவ்வளவோ இருந்தாலும் சுமார் 30-வருஷங்களுக்கு முன்னிருந்ததை விட இப்பொழுது எவ்வளவோ பெண்களுக்குள் கல்வி பரவியிருக்கிறது. இத்துறையில் 30-வருஷங்களுக்குமுன் துணிந்திறங்கி வழிகாட்டியாக விருந்துழைத்தவர் மிஸ்ஸஸ் ப்ராண்டர். அப்பொழுது இருவக்குக் கலியாணமாகவில்லையாகையால் பிறந்தகத்துப்போம் இஸாபேல்பெய்ன் என்னும் கன்னிப்பேர் தரித்துழைத்துவந்தார். இவர் இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் படித்து 17-வயதுக்குள் கல்வியில் தேர்ந்தவராய் 23-வயதாகுமுன் உபாத்திமைத் தொழிலில் பிரவேசித்துழைத்து வரலானார். இவர் 1870-ம் வருஷத்தில் 22-வயதுள்ள இளமடந்தையாக விருக்கையில், சென்னையில் ஸ்திரீகளை உபாத்திமைத் தொழிலிற் பழக்குவதற்கான "நார்மல் ஸ்கூல்" ஒன்று ஸர்க்கார் ஆதரணையில் ஏற்படுத்தி நடத்திவரும்படி அனுப்பப்பட்டார். வயதிற்பாலியமாயினும், புத்தியிலும் மனத்தேர்ச்சியிலும் முதிர்ந்தவரா யிருந்தமையால், அந்நியதேசத்தில் அயலாருக்குமத்தியில் ஏகாங்கியாகவிருந்து புதிதாய் ஒரு வித்தியாஸ்தாபனத்தையேற்படுத்தி நடத்துவது நம்மால் எப்படி சாத்தியமாகுமென்று தியங்கித் தவிக்காமல் தைரியமாய்த்தான் தொடுத்த வேலையில் ஊக்கம் குன்றாது நின்றுழைத்து அந்த ஸ்தாபனத்தை நல்ல ஸ்திதிக்குக் கொண்டுவந்தார். அப்பொழுது அவரிடம் படித்த பெண்கள் இப்பொழுது நல்ல பதவியிலிருக்கிறார்கள்.

1876-ம்வருஷத்தில் மிஸ்பெய்ன் சர்க்கார் வேலையைவிட்டு நீங்கி விவாகம்செய்துகொண்டார். விவாகமானதும் அவர் இந்தியாவைவிட்டுச் சீமைக்குப் போய்விட்டார். ஆனால் 880-ம்வருஷத்தில் அவர் மறுபடியும் ஸ்கூல் இனிஸ்பெக்ட்ரெஸ்வேலையொப்புக்கொண்டு இந்தியாவுக்குத் திரும்பிவந்தார். இந்த உத்தியோகத்திலிருந்து இவர் பெண்கல்வியை விர்த்தி செய்யும்பொருட்டு எடுத்துக்கொண்டமுயற்சி இவ்வளவுஅவ்வளவென்று சொல்லிமுடியாது. 1903-ம் வருஷம் வரையில் இவர்இந்த வேலையிலிருந்துழைத்துப் பெருங்கீர்த்தியும் பெற்று அவ்வேலையிலிருந்து பென்ஷன்பெற்றுக்கொண்டு நீங்கினார். நீங்கியும், அவர் இந்தியாவினிடத்தில் வைத்த பிரீதியினால் இன்னமும் இங்கேயேயிருந்துழைத்து வருகிறார். இந்த 23-வருஷகாலத்தில் பின் 10-வருஷகாலம் நாம் இவரோடு கூடி இவருக்கு அனுகுணமாக உழைக்கும்படியான பாக்கியம்பெற்றதால் அக்காலத்தில் இவர் நமக்குசெய்த உதவியுபகாரங்களாலும் பெண்கல்வியபிவிர்த்தி விஷயத்தில் மேன்மேலு முழைக்க உற்சாகமுண்டாக, நல்லயோஜனைகள் சொல்லியும், மனஞ்சலித்தவிடத்து உற்சாகப்படுத்தியும், நல்லயோசனைகள் சொனனால் அதையங்கீகரித்து அதில் ரஸமானபாகத்தை கிரகித்து விரஸமான பாகத்தைத் திருத்தியும் இப்படி அவர்மேற்போட்டுக்கொண்ட விஷயத்தில் எவ்வளவோ உண்மையாகவும் உற்சாகமாகவு முழைத்துவந்தார். இவரோடு சேர்ந்துழைப்பது ஒன்றே உழைப்பவர்களுக்குப் பெரும்பாக்கியமென்று தோன்றும்படி நடந்துவந்தார். டிபார்ட்மெண்டு சம்பந்தமில்லாதவரிடத்தில் இப்படி யிருந்தால் இவருக்குள்பட்டு இவரோடு ஒத்துழைக்க வேண்டியவர்களிடத்தில் எவ்வளவு ஹிதம் பாராட்டியிருப்பாரென்பதை ஊகமாய் அறிந்துகொள்ளலாம். பெண்கல்வியபிவிர்த்தியில் இவருடைய நோக்கங்கள் கிண்டர்கார்டன் முறையை அனுசரித்ததாய், தேக மனோசக்திகளும் நடத்தையும் சீர்பட்டு விளங்கும்படி யானதாயிருந்தது. இந்தியர்களுக்கு இத்தேசத்துப்பழைய வாசனை சம்பந்தமான வழிகளையொட்டி வித்தை பயிற்றுவிக்க முயற்சித்தாரேயன்றி மேற்றிசைப்பழக்க வாசனையையொட்டி அவர்கள் மனதைத்திருப்ப நினைத்தாரில்லை. புத்தி விர்த்தியுண்டான விடத்தில் சத்தியமும், சாமார்த்தியமும், சன்மார்க்கமும் தானே யுதிக்கு மாதலால் புத்திவிர்த்தியையே நாடியுழைத்தார். அன்றி படிப்பு பெண்களுக்குள் மட்டுமன்றி ஸ்திரீகளுக்குள்ளும் பரவ வேண்டுமென்று பாடுபட்டுழைத்து வந்தார். அதற்காக வேண்டிய சாதக சாதனங்களையும் முறையறிந்துபயோகித்தார் இவருடையகாலத்தில்பெண்கல்வி மிகவும் பரவினதன்றி அதிக விர்த்தியு மடைந்து வந்தது. நாஷனல் இந்தியன் அஸோஸியேஷன் சம்பந்தமாக இவர் அச்சபையின் சென்னைக் கிளைக்கு உயிர்த்துணையாக விருந்துழைத்துவந்தார். ஹிந்துப் பெண்கள் படிப்பு ஆரம்பத்திலே முடிவுக்கு வராதபடி மேன்மேலும் விர்த்தியாக வேண்டியதற்கு அனுகுணமாக உழைத்துவந்தார். மகாராணி பத்திரிகையையும், இந்த விவேகசிந்தாமணி பத்திரிகையையும் பெண்கல்வியபிவிர்த்திக்கு அனுகூலமான சாதனங்களாகக் கருதி ஆதரித்துவந்தார். அன்றி பெண்களுக்கும் ஸ்திரீகளுக்கும் உபயோகமாக குடித்தனச்செட்டு, பாலபோதனை முறை, சுகாதார சம்பாஷணை முதலிய கிரந்தங்களையும் வெகு பாடுபட்டு எழுதிப் பதிப்பித்தார். இவைகளைத் தமிழிலும் பதிப்பிக்கச் செய்தார். இப்படி வெகுகாலமாகப் பாடுபட்டுழைத்த இவருடைய ஞாபகம், நிலைநிற்கும்பொருட்டு.இவர் ஆதியில் ஏற்படுத்திய ஸ்தாபனமாகிய "ப்ரெஸிடென்ஸி ட்ரெயினிங் ஸ்கூல்" என்று தற்காலம் பேர்வழங்கும் எழும்பூரிலுள்ள ஸ்திரீகள் வித்தியாஸ்தாபனத்தில் இவருடைய படம் ஒன்று எழுதிவைக்கத் தீர்மானித்தார்கள். அப்படம் சீமையில் எழுதப்பட்டு வந்துசேர, சென்ற அக்டோபர்மீ 20-உ யன்று ஸர் ரால்ப் பென்ஸன் அக்ராசனாதிபதியாக வீற்றிருக்க, டாக்டர் மில்லர் துரையவர்களால் திறக்கப்பட்டது. அப்பொழுது மிஸ்ஸஸ் அல்லன் எழுதிப்படித்த இவருடைய சரித்திரக்குறிப்பையொட்டி இவ்விஷயங்கள் இங்கே தீட்டப்படலாயின. இவர் இன்னும் வெகுகாலம் திடகாத்திரத்தோடும் ஆரோக்கியத்தோடும் இங்கே யிருந்து பெண்கல்விக்குச சாதகமான அனுகூலம் செய்து அவர் காலத்தைத் தள்ளிவரக் கடவுள் அருள் புரிவாராகப் பிரார்த்திக்கிறோம்.

# SITA—A TALE OF HINDU DOMESTIC LIFE.
# சீதா அல்லது இல்லற வாழ்க்கை.

## அதிகாரம். 14.

தங்கம் சாந்தி முகூர்த்தமான பிறகு காமேசுரய்யர் தங்கத்தை புக்ககத்திலேயே விட்டு விட்டுப் போகவேண்டியிருந்தது. காமேசுரய்யருக்கு தங்கத்தை விட்டு விட்டுப்போக மனமே இல்லை. ஆனால் அதற்காக இவர் இருந்துவிட்டுப்போகிறது என்றாலும் கூட்டம் ஊர்முழுவதும் கூட்டிவந்திருக்கிறார். ஆதலால் காமேசுவரய்யர் தங்கத்தை விட்டு விட்டே போகவேண்டியிருந்தது. காமேசுரய்யர் தங்கத்தினிடத்தில் சேஷய்யரைவிட இன்னும் அதிகமாகப் பழகிவிட்டபடியால் தங்கமும் ஊரில் இவரை விட்டுப் பிரியாதிருந்தபடியால் காமேசுரய்யருக்கு தங்கத்தினிடத்தில் ஊருக்குப் போவதாக சொல்லிக் கொள்ளும்போது துக்கம் நெஞ்சை அடைத்து வந்தது, காமாக்ஷி-அம்மாளும் அதேமாதிரி தங்கத்தினிடத்தில் துக்கத்தை காட்டினாள். தங்கம் சிறு குழந்தையாதலால் தன்னை அறியாமலேது துக்கம் வந்துவிட்டது. பிறகு தனக்குத்தானே சமாதானம் செய்துகொண்டு அவர்களுக்கு ஊருக்குப் போய் வரும்படி உத்திரவுகொடுத்தாள். தங்கம் வீட்டில் செல்வமாய் வளர்ந்தவள். காமேசுரய்யருடனேயே எதிர்வாது பேசிக்கொண்டு வேடிக்கையாக அவள் பொழுதை போக்குவாளேயன்றி காரியம் ஒன்றும் செய்யமாட்டாள். காமேசுவரய்யருக்கு ஊருக்குப் போகும்போது இவள் புக்ககத்தில் எப்படி காரியம் செய்வாளென்கிற விசாரந்தவிர வேறு விசாரம் ஒன்றுமில்லை. சம்பந்தியம்மாள் வெங்கலக்ஷ்மியைக் கூப்பிட்டு காமேசுவரய்யர் கண்ணில் நீர்ததும்ப வெங்கலக்ஷ்மி என் தங்கத்துக்கு தாயாரில்லை. எல்லாம் நீதான் தாயார். அவளுக்கு வீட்டு காரியம் ஒன்றும் தெரியாது. எல்லாம் நீ தான் சொல்லிக்கொடுத்து நிர்வஹித்துக்கொள்ள வேணுமென்றார். வெங்கலக்ஷ்மி அம்மாள் அண்ணா அதற்காக நீங்கள் ஒன்றும் கலக்கப்பட வேண்டாம். எல்லாம் நான் பார்த்துக் கொள்ளுகிறேன் என்றாள். காமேசுரய்யர் எல்லோரும் ஊருக்குப்போன பிறகு தங்கம் வீட்டில் காரியம்செய்து கொஞ்சம் கொஞ்சமாக கற்றுக்கொண்டு விட்டாள்-வெங்கலக்ஷ்மி அம்மாளும் அவளுக்கு கொஞ்சம் கொஞ்சம் கொஞ்சமாக காரியமெல்லாம் சொல்லிக்கொடுத்தாள். சில நாள்களுக்குள் தங்கம் வெகு நல்ல பெயரெடுத்ததும் தவிர வீட்டுக்காரியங்கள் அவள்போல வேறு ஒருவரும் செய்ய முடியாதென்றும் அந்த ஊரில் எல்லாரும் சொல்லிக்கொள்ளும்படி நடந்து கொண்டாள். வெங்கலக்ஷ்மி அம்மாளும் நாட்டுப் பெண்ணிடம் வேலை வாங்குவதிலும் அவளைப்பழிப்பதிலும் கீழ்தேசத்து மாமியார் நாத்தனார் மார்களுக்கு குறைந்தவள்அல்ல. கீழ்தேசத்து மாமியார்கள் நாட்டுப்பெண் வீட்டிற்கென்று விலைக்கு வாங்கி வரப்பட்ட அடிமைகளென்றே நினைத்து அடிமைகளைப்போலவே நடத்துவார்கள். நாட்டுப்பெண் தன் புருஷனுடன் சற்றுகூடநின்று பேசக்கூடாது. பேசினால் அன்றைக்கு அனர்த்தம்தான். புருஷன் பெண்சாதிகளுக்கு என்ன பேச்சு இருக்ககூடும். அப்படி பேச்சு இருந்தால் மாமியை புருஷனிடம் தூஷிக்கிற பேச்சாகத்தானிருக்க வேண்டுமென்று அவர்களுடைய எண்ணம். குற்றமுள்ள நெஞ்சு குறு குறுக்கு மென்பதுபோல் தான் நாட்டுப்பெண்களைகொடுமை செய்வாளாதலால் அக்கொடுமைகளை புருஷனிடம் சொல்லுகிறாளென்று சந்தேகப்படுகிறாளேயொழிய அவர்கள் வேடிக்கையாக அல்லது இவளை ஸ்தோத்திரம்செய்து பேசினால் கூட இவள் மனதிற்கு தூஷணையைத் தவிர வேறு ஒரு எண்ணமும் செல்லாது. பேசிவிட்டு சற்றுவெளியே வருவதற்குள் மாமியாருக்கும் நாட்டுப்பெண்ணுக்கும் உடனேயுத்தம் தான். ஆனால் அப்படிப்பட்ட மாமியார்களை சமாதானம் செய்ய சுருக்கமான ஒரு வழி ஒன்று உண்டு. நாட்டுப் பெண்ணின் பேரிலும் பிள்ளைபேரிலும் மாமியார் கோபித்திருந்தால் அதைக்கண்டுபிள்ளை நாட்டுப்பெண்ணை மொத்து மொத்து என்று பூசைகள் கொடுத்து அவள் அழுதால் உடனே மாமியாருக்கு சந்தோஷம். இவன் தான் என்பிள்ளை யென்பாள். ஆனால் இப்படிப்பட்ட மாமியாருக்கும் நமது வெங்கலக்ஷ்மி அம்மாளுக்கும் ஒரு வித்யாசம் உண்டு. கீழ்தேசத்து மாமியார் நாட்டுப் பெண்ணுக்கு ஒருபோதும் உபசாரம் செய்யமாட்டாள். வெங்கலக்ஷ்மி அம்மாள் கோயமுத்தூர் ஜில்லாவாதலால் கல்யாணமானவுடனே நாட்டுப்பெண்ணுக்கு தினந்தோறும் புடவை தோய்த்துப் போடுவாள். நாட்டுபபெண் அதிகமாக நடந்தால் கால்வலிக்கு மென்பாள். இராத்திரி பால் கொடுக்கவேண்டு மென்றும் இல்லாவிடில் சூடாகும் என்றும் சொல்வாள். ஆனால் சாந்தி முகூர்த்தம் ஆகி நாட்டுப்பெண் தன் புருஷனிடம் ஒருநாள் படுத்துக் கொண்டாளோ பிறகு எல்லாம் மாறிவிடும். அப்புறம் எல்லாம் நாட்டுப்பெண் தான் செய்யவேண்டும். அதிலும் புருஷனிடம் எதாவது பேசிக்கொண்டிருந்தால் போதும். அப்புறம் விரோதத்துக்கு ஆரம்பம் தான். ஆனால் இங்கே வெங்கலக்ஷ்மி யம்மாள் தங்கத்தினிடத்தில் அனுசரிக்கவில்லை. ஏனென்றால் தங்கம் பணக்காரியென்றும். செல்வாக்குள்ளவளென்றும் அவளுக்கு நன்றாய்த் தெரியும். ஆதலால் தங்கத்தை அவள் மரியாதையாகவே நடத்தி வந்தாள். தங்கமும் அதற்கு தக்கபடி வெகுயுக்தியாய் காரியங்களைக் கற்றுக்கொண்டு வெங்கலக்ஷ்மி அம்மாள் மனம் கோணாமல் நடந்து வந்தாள். நாராயண சாஸ்திரிகளுக்கும் தங்கத்தின் மீது வெகு பிரியம்

ஸ்ரீனிவாஸனுக்குச் சொல்லவே வேண்டியதில்லை. ஸ்ரீனிவாஸனை இனிமேல் ஸ்ரீனிவாஸ சாஸ்திரிகளென்று சொல்வோம். அவனுக்கு சாந்திமுகூர்த்தம் ஆகிவிட்டபடியாலும் எப். ஏ. கிளாஸில் ஸ்கூல் முதல் அவனை அப்படி கூப்பிடுவதாலும் ஸ்ரீனிவாஸனென்றுமட்டும் கூப்பிட்டால் அவன் கோபித்துக் கொள்வதாலும் சாஸ்திரி பட்டத்தை இனி சேர்த்து வருவோம். கிராமந்திரங்களில் சிலர் சிறுவயதில் பயல் என்று கூப்பிட்டால் அதேபெயர் பெரியவர்களாகியும் அது போகிறதில்லை. சிறுவயதில் மொட்டை அடித்துக் கொண்டால் அவனை மொட்டையென்று சிறுவயதில் கூப்பிடுவதும் தவிர பெரியவர்களாகியும் அந்தப் பெயரே நிலைத்து விடுகிறது. ஸ்ரீனிவாஸன் இந்த உத்தேசித்துதான் தனக்கு எங்கேயாவது அந்தப்பெயர் நிலைத்து விடப்போகிறதென்று பயந்து ஸ்ரீனிவாஸ சாஸ்திரியென்று எல்லோரும் தன்னை கூப்பிடும்படி வேண்டிக் கொண்டான். ஸ்ரீனிவாஸ சாஸ்திரிகளுக்கு தங்கத்தால் அவள் சொத்து முழுவதும் தனக்கு கிடைத்ததாலும் தங்கம் நல்ல புத்திசாலித்தனமாக அவரிடத்திலும் நடந்து கொண்டதாலும் தங்கம் சொல்லை ஒருபோதும் தட்டமாட்டார். நாராயணசாஸ்திரிகள் தன் சம்சாரத்துக்கு சமயங்களில் புடவை தோய்த்துப் போடுகிறதுபோல ஸ்ரீனிவாஸ சாஸ்திரிகளும் தங்கத்துக்காக வீட்டுக்காரியங்களை யெல்லாம் கூடப்பார்த்து வருவார். வெங்கலக்ஷ்மியம்மாள் தங்கத்தை இரண்டு வருஷம் நன்றாய் வைத்திருந்தாள். பிறகு அவள் சுபாவகுணத்தைக் காண்பிக்க ஆரம்பித்தாள். தங்கம் சற்று புருஷனிடம் நின்று பேசினால் என்ன அதிசயமடியம்மா. இந்த கலிகாலத்திற்கென்று எல்லாம் தலைகீழாக விழுகிறது. எப்போ பார்த்தாலும் என்ன பேச்சு இருக்கும் அகமுடையானிடத்தில். ஏதோ அதிசயமாய் அகமுடையானை அடைந்தால் போலிருக்கிறது என்பாள். தங்கம் என்ன நன்றாய் வீட்டுவேலைகளைச் செய்தும் அதுகளை யெல்லாம் நொடிக்கவாரம்பித்தாள். அண்டை வீட்டுகாரர்களிடம் எல்லாம் தங்கத்தை தூஷிக்கவாரம்பித்தாள். கடைசியில் ஒருநாள் தங்கத்துக்கு அவளுடைய தூஷணை பொறுக்கமாட்டாமல் ஸ்ரீனிவாஸ சாஸ்திரிகளிடம் சொன்னாள். ஸ்ரீனிவாஸ சாஸ்திரிகள் தாயாரைக் கூப்பிட்டு நல்லபுத்தி சொல்லி இனிவீட்டு ரகசியங்களை வெளியேவிடக் கூடாதென்று சொன்னார். அப்படியிருந்தும் வெங்கலக்ஷ்மியம்மாள் வாய் நிற்கவில்லை. கடைசியில் ஸ்ரீனிவாஸ சாஸ்திரிகள் இவளுடைய கெட்ட நடதைகள் ஒன்றும் பொறுக்ககூடாமல ஒருநாள் கோபம்வந்து வெங்கலக்ஷ்மி அம்மாளை இரண்டு அடி அடித்துவிட்டார். அதற்கவள் அந்த ஊர்முழுவதும் தன் பிள்ளை பெண்டாட்டி பேச்சைக் கேட்டுக்கொண்டு தன்னை கொல் கொல்லென்று கொன்றுவிட்டானென்று சொல்லிக்கொண்டாள். இதை யெல்லாம் கேட்ட ஸ்ரீனிவாஸ சாஸ்திரிகளுக்கு இங்கே யிருக்கப் பிடிக்கவில்லை. இப்படி யிருக்க ஒருநாள் பந்தலூரிலிருந்து ஸ்ரீனிவாஸ சாஸ்திரிகளுக்கு ஒருகடிதம் வந்தது. பங்களா ஏஜண்டு வேம்புவய்யர் யெழுதி யிருந்தார். அதில் மேற்குப் புரம் பழய கட்டடம் நிரம்ப இடிந்து விழும்போலிருக்கிறதென்றும் அதை சமயத்தில் செலவுசெய்து ரிபேர் செய்தால் இப்போதிருக்கிற பங்களாவை விட இன்னும் சுகமாயிருக்கு மென்றும் எழுதி யிருந்தது, ஸ்ரீனிவாச சாஸ்திரிகள் இது தான் சமயமென்று கண்டு நாராயண சாஸ்திரிகளிடம் அதை ரிபேர் செய்தால் தானும் தங்கமும் அங்கே குடிபோகலாம் என்றார். நாராயண சாஸ்திரிகளுக்கு வெங்கலக்ஷ்மி அம்மாளின் கெட்ட குணம் நன்றாய்த்தெரியுமாதலால் அவர் தன்பிள்ளை நாட்டுப்பெண்பேரில் ஒரு தப்பிதமும் இல்லை யென்று அறிந்து கொண்டார். ஆனால் வெங்கலக்ஷ்மி அம்மாளுடைய கொடுமைக்கு அவர்களை பந்தலூருக்கு அனுப்புவதே நலமென்று யோஜித்தார். உடனே பங்களா ஏஜண்டு வேம்புவய்யருக்கு. 2000. ரூபாய் அனுப்பப்பட்டது. வேம்புவைய்யர் அவர்கள் குடும்பத்தில் வெகு நாள் பழகினவர்.

ஆகையால் ஸ்ரீனிவாச சாஸ்திரிகள் அவரிடம் நம்பிக்கையாக பணத்தை அனுப்பி உடனே பங்களா ரிபேர் காரியத்தைப் பார்க்கும்படி சொன்னார். வேம்புவைய்யருக்கு அந்த் ரிபேர் ஆனவுடனே தானே வந்து குடியிருப்பதாயும் எழுதினார். வேம்புவைய்யர் அந்தப்படியே ரிபேர் வேலையையெல்லாம் வெகு சீக்கிரத்தில் முடித்தார். ஸ்ரீனிவாஸ சாஸ்திரிகளுக்கு இந்த வேலையெல்லாம் முடிந்த விஷயத்தை வேம்புவய்யர் தெரிவித்தார். ஆனால் அந்தப் பணத்தைகொண்டு வடகோடி அறையைமட்டும் ரிபேர்செய்ய முடியவில்லையென்று எழுதினார். இதற்குள் ஸ்ரீனிவாஸ சாஸ்திரிகளுக்கு பி. ஏ. பரிக்ஷை தவறிப் போய்விட்டதாகக் கடிதம் வந்தது. வெங்கலக்ஷ்மி அம்மாள் நன்றாய்ப்படிச்சானா பரிக்ஷைதேறும். எப்போ பார்த்தாலும் பெண்டாட்டியோடு ரகசியம் பேசிக்கொண்டு உட்கார்ந்து அவள் ஞாபகமாகவே யிருந்தால் எப்படி படிப்புவரும். அதிசயப்பெண்டாட்டி இவனுக்குத்தான் கிடைத்துவிட்டாப்போலிருக்கிறது என்றாள். தங்கத்துக்கு இதை எல்லாம் கேழ்க்கப்பிடிக்கவில்லை. தங்கம் இப்போது கர்ப்பமாய் இருந்தாள். அவளுக்கு காமேசுரய்யர் ஊருக்கு கூட்டிப்போய் வளகாப்பு செய்து அதன்பிறகு ஸ்ரீனிவாஸ சாஸ்திரிகள் வீட்டில் சீமந்தம் நடந்ததையும் நாம் விவரிக்கவேண்டுவது அனாவசியம். தங்கத்துக்கு வெங்கலக்ஷ்மி அம்மாளுடைய உபத்திரவம் பொறுக்கக் கூடவில்லை. ஸ்ரீனிவாஸ சாஸ்திரிகளிடம் கொஞ்சநாள் தனியாக பங்களாவில் போயிருக்கலாமென்று ஏஜண்டு வேம்புவய்யருக்கு தான் சீக்கிரம் வருவதாகவும் பங்களாவை ஒழித்துவைத்து அவர்கள் ரிபேர்செய்த ஜாகாவுக்குப் போகவேண்டும் என்றும் கடிதம் எழுதினார். வேம்புவய்யர் அப்படியே எல்லாம் ஒழித்து வைத்

திக்கொண்டு ஸ்ரீனிவாஸ சாஸ்திரிகள் வரவை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார். ஸ்ரீனிவாஸ சாஸ்திரிகள் வருவதாகச் சொன்னதினத்தில் அவருக்குப் பிரியமான பதார்த்தங்களை வாங்கி சமயல் முதல் செய்துவைத்து வேம்புவய்யர் காத்திருந்தார். ஸ்ரீனிவாஸ சாஸ்திரிகள் வரக்காணோம். மறுநாளும் எதிர்பார்த்தார் காணோம், மூன்றுநாள் முதல் 15-நாள்வரையில் பார்த்தார். ஸ்ரீனிவாஸ சாஸ்திரிகளையும் காணோம். கடிதத்தையும் காணோம். வேம்புவைய்யர் ஒன்றும் செய்யத்தோன்றாமல் ஆச்சரியப்பட்டுக்கொண்டிருந்தார். நாராயண சாஸ்திரிகள் குடும்பத்தில் இதனிடையில் நேர்ந்த கலியாணங்களை நாம் இதுவரையில் சொல்லவில்லை. நாராயண சாஸ்திரிகள் பெண்ணிற்கு கலியாணம் தங்கத்தின் சாந்திமுகூர்த்தத்தின் போது ஆரம்பிக்கப்பட்டு நின்றுவிட்டதென்று நாம் முன்னேயே சொல்லியிருக்கிறோம். நாராயண சாஸ்திரிகள் பெண்ணை கேழ்ப்பார்கிடையாது. நாராயண சாஸ்திரிகளும் ஊர் ஊராய்ப்போய் விஜாரித்தார். ஒருவரும் சம்மதிக்கமாட்டேனென்று சொல்லிவிட்டார்கள். நாராயண சாஸ்திரிகளிடம் கோபித்துக்கொண்டு போன சம்பந்தியும் அனேக இடங்களில் பெண் விஜாரித்தார். இவர் வலுவில் பிள்ளைக்குப் பெண் விஜாரிப்பதைப்பார்த்து ஜனங்கள் இவர் பிள்ளைக்கு ஏதோ குறைவு இருப்பதாகவும் அதனால் தான் வலுவில், பெண்ணுக்காக விஜாரிக்கிறார். பெண்ணுக்குப் பிள்ளை விசாரிப்பது சகஜமாய் இருக்க இவர் பிள்ளைக்கு பெண் விஜாரிக்கிறார் என்று எண்ணி குறைவு இருக்குமென்று யோஜிக்கலானார்கள். கடைசியில் ஒரு இடமும் அகப்படவில்லை இப்படி இருக்க தாகு ராஜு சாஸ்திரிகள் என்ற ஒருவர் அவருக்கு சிநேகமானார். அவரிடத்தில் தன் பிள்ளைக்கு எப்படியாவது ஓர் பெண் சம்பாதித்துத் தரும்படி கேட்டார். ராஜு சாஸ்திரிகள் நெடுகிலும் அலைந்துபார்த்து கடைசியில் நாராயண சாஸ்திரிகளிடம் போய்ச்சேர்ந்தார். நாராயண சாஸ்திரிகளை ஊர்முழுவதும் திரண்ட பெண்ணை கலியாணம் செய்யாமல் வைத்திருப்பதாக கேலி செய்தபடியால் அவரும் ராஜு சாஸ்திரிகளை சிநேகம் செய்து எப்படியாவது தன் பெண்ணுக்கு ஒரு வரன் சம்பாதித்துத் தரும்படி கேட்டார். ராஜு சாஸ்திரிகள் அவருக்காகவும் நெடுகத் தேடிப்பார்த்தார் அகப்பட வில்லை. கடைசியில் ராஜு சாஸ்திரிகள் ஓர் இடம் பார்த்திருப் பதாகவும் கல்லியாணம் திருப்பதியில் நடத்த தான் சம்பந்திகள் சம்மதிக்கிறார்கள் என்றும் சொன்னார். நாராயண சாஸ்திரிகள் பழய சம்பந்திக்கும் ஓர் பெண் நிச்சயம் செய்திருப்பதாயும் பெண்ணைப் பெற்றவர்கள் திருப்பதியில் தான் கல்லியாணம் செய்யவேண்டுமென்று சொல்வதாயும் சொன்னார். அவரும் அப்படியே சம்மதித்தார் ராஜு சாஸ்திரிகள் நாராயண சாஸ்திரிகளை முன்னாடியே திருப்பதிக்கு கூட்டிப்போய் சகல ஏற்பாடுகளையும் செய்துவைத்தார். பிறகு சம்பந்திகளையும் கூட்டிவந்தார். கல்லியாணத்தன்று தான் சம்பந்திகள் மாப்பிள்ளை எல்லோரையும் நாராயண சாஸ்திரிகள் பார்த்தார். அவர் ஆச்சரியத்தை என்ன சொல்லுகிறது. தன்னிடம் கோபித்துக்கொண்டு போன சம்பந்தியாயிருக்கக்கண்டு ராஜு சாஸ்திரிகளை இதென்ன நீர் செய்த மோசமா என்றார். சம்பந்திகளும் ராஜு சாஸ்திரிகளை முன்னமேயே நீர் சமலாவடி நாராயண சாஸ்திரிகளென்று சொல்லியிருந்தால்நான் வேண்டாமென்றுசொல்லிவிடுவேனே என்றார். பிறகு ராஜு சாஸ்திரிகள் அய்யா நீங்கள் இருவரும் என்னை கோபித்துக்கொள்கிறீர்கள். நான் என்ன செய்யட்டும் நான் நாராயண சாஸ்திரிகள் பெண்ணிற்கு எங்கே போய்க்கேட்டாலும் அது திரண்ட பெண் வேண்டாமென்று சொல்லிவிட்டார்கள். உங்கள் பிள்ளைக்கும் அலைந்து பார்த்தேன். அவனுக்கு ஏதோவியாதி மாட்டேனென்கிறார்கள். நான் என்ன செய்கிறது. நீங்கள் இருவரும் தான் சம்பந்தம் செய்துகொள்ள வேண்டுமென்று யோஜித்தேன் என்றார். நாராயண சாஸ்திரிகள் சகல ஏற்பாடுகளும் செய்துவிட்டார். இனி தாமதிக்க முடியவில்லை. சம்பந்திக்கும் அப்படியே ஆகிவிட்டது. பிறகு இருவரும் சம்மதிக்க வேண்டியிருந்தது. கடைசியில் தன் பெண்ணை தொட்டு விட்டுப்போன புருஷனுக்கே அவர் பெண்ணைக்கொடுத்தார். நாராயண சாஸ்திரிகள் இரண்டாவது பிள்ளை சீதாராமனுக்கு பிள்ளையில்லா சொத்துக் கிடைக்க அவர் பார்த்தார். கன்னிவாடி கிராமத்தில் ஒரு தனவானுக்கு 3. பெண்கள்மட்டும் இருந்தார்கள். அதில் நடுப்பெண் காக்கைநிறத்தை விட கொஞ்சம் சிகப்பாயிருக்கும். அந்தப்பெண் ஜாதகத்தை தானே சிபார்சுசெயது வாங்கிபார்த்தார். ஜாதகம் சேரவில்லை. ஜோஸியரை கூப்பிட்டு அவருக்குத்தகுந்த இனாம் கொடுப்பதாகச் சொல்லி ஏற்பாடுசெய்தார். அவர் பெண்ணின் தகப்பனிடம் அந்த ஜாதகத்தைப்போல் பொருந்த முன்ன ஜாதகமும் வேறொன்றுமில்லையென்றார். பிறகு பெண்ணின் தகப்பன் சம்மதித்து அவர் இஷ்டப்படியே கல்யாணமும் நடந்தது. காருயண சாஸ்திரிகள் உத்தேசப்படியே அப்பெண்ணின் தகப்பனும் சல்லியாணம் செய்த ஒரு வருஷத்திற்குள் இறந்து போய்விட்டார்.

இன்னும் வரும்.

எஸ். இராமஸ்வாமி ஐயர் பி. ஏ.

# Preliminary Statement of the Position of Arbuthnot & Co, By Messrs. Lovelock and Lewis the Chartred Accountants 17th November, 1906.

**Liabilities.**—கடன்கள்

| | | Rs. |
|---|---|---|
| கரண்ட் அக்கௌண்ட்தொகை Creditors on Banking current accounts | ... | 26,15,066 |
| Creditors for fixed deposits வட்டிக்கிட்டிருந்த தொகைகள் | ... | 2,43,62,905 |
| மொத்தம், Total | ... | 2,69,77,971 |
| Sundry creditors. இதரகடன்கள். | ... | 7,67,531 |

(all balances are net, and counter and secured claims have been set off against investments held.)

*Memo.*—Drafts drawn on London through Exchange Banks amounting to Rs. 15,11,669 have been taken as liabilities in Madras and set off against securities; it is possible that the whole or a portion of these may have been included in the London liabilities.

| | | |
|---|---|---|
| மொத்தக்கடன். Total liabilities | ... | 2,77,45,502 |
| Madras deficits brought down சென்னையில் சேர்ந்த கஷ்டம். | ... | 2,01,61,524 |
| London estimated Liabilities as cabled by the Official Receiver, London, to the Official Assignee, Madras £470,000 at 1/4 லண்டன் கடன்கள் | ... | 70,50,000 |
| Total ஆக மொத்தம் | .. | 2,72,11,524 |

**Assets**—சொத்து விவரம்.

| | | | |
|---|---|---|---|
| Loans estimated "good" நல்லகடன். | ... | | 2,04,159 |
| Overdrafts on current account கணக்கில் அதிகப்படிபற்று | ... | | 67,706 |
| Total—மொத்தம் | .. | | 2,71,865 |
| Coffee Estates காப்பித்தோட்டங்கள் | ... | | 15,33,189 |
| Piece goods, Stocks, Pro-notes, &c. சரக்குகளும்ப்ரோநோட்டுகளும். | ... | | 7,77,828 |
| Sundry block stocks and miscellaneous assets சில்லரைகள்வரவேண்டியது, | | | 9,10,745 |
| Investment.—வியாபாரமுதல் | | | |
| Sundry shares and Government paper ஷேர்களும் கவர்ன்மெண்ட் பேப்பர்களும் | | 5,71,637 | |
| Arbuthnots' Industrials, Limited, ordinary at par அர்புத்நட்ஸ் இண்டஸ்டிரியல்ஸ் லிமிடெட் | ... | 25,00,000 | |
| Do. Preferncc do | ... | 4,83,000 | |
| Mysore Sugar Company, Ltd, ordinary shares, 50, paid at par மைசூர் சர்க்கரை கம்பெனி லிமிடெட் | ... | 5,00,000 | |
| மொத்தவியாபார முதல் Total Investment | ... | | 40,54,637 |
| ரொக்கம் Cash | .. | | 35,714 |
| * Balance being estimated deficit in Madras சென்னையில் சொத்து கஷ்டத்தொகை பாக்கி | | | 2,01,61,524 |
| மொத்தம்—Total | ... | | 2,77,45,502 |
| Estimated London Assets as cabled £23,000 லண்டன் சொத்து | | | 3,,000 |
| Total estimated deficit மொத்த கஷ்டம் | ... | | 2,68,66,524 |
| மொத்தம்—Total | ... | | 2,72,11,524 |

*** Details of Deficits, 22nd October, 1906.**

கஷ்டபாபத்துகள் விவரம்

| | | Rs. |
|---|---|---|
| Bad debts, current accounts அதிகடன் | ... | 5,68,852 |
| Bad miscellaneous loans கெடு.சில்லரை | ... | 9,42,834 |
| Coffee Estates written off காப்பித்தோட்ட கஷ்டம் | ... | 47,41,358 |
| Miscellaneous bad assets சில்லரை கெடு | ... | 41,71,871 |
| Partners' Drawings at debit பங்காளிகள்பற்று | ... | 9,55,994 |
| Partner' loans கெடு கடன் | ... | 2,40,732 |
| London Current and No 2 Account. லண்டன்கணக்கழிவு | ... | 35,77,012 |
| London "Home Investment Account" லண்டன் வியாபார முதல்கணக்கு | ... | 34,80,694 |
| Miscellaneous Adjustments சில்லரை கணக்குகள் | .. | 14,82,177 |
| மொத்தம்—Total | ... | 2,01,61,524 |

## RE THE ARBUTHNOT INSOLVENCY.

**Wednesday 12th December. 1906.**

This morning before his Lordship Mr. Justice Boddam, Mr. Archibald Read, Official Assignee, renewed his application for an order permitting him to arrange with the Bank of Madras that the Bank should take a lien over the jute as and when it was delivered to him and make advances against it to the extent of 85 per cent. of the value of jute delivered to their keeping with a view to keep going the Chittavalsa Jute Factory, one of the business of the Arbuthnot's Industrials, Limited., of which he gave notice the other day.

Boddam J.—I think, Mr. Read I should not continue to sit and go into any matter, in which any creditor my think that I have any interest adverse to the creditors.

Mr. Read.—That is why I am rising to formally move this application. I understand this creditor (pointing to Mr. C. V. Swaminatha Aiyar) has filed an affidavit objecting to your Lordship hearing this application.

Boddam J.—I have hitherto acted in matters merely administrative but not Judicial.

Mr. Read.—Then, I understand your Lordship does not wish to hear this application.

Boddam J.—Yes, I think so.

Mr. Read.—Then, I shall make my application elsewhere.

The parties then withdrew.

The following is the affidavit of Mr. C. V. Swaminatha Aiyar:—

1. I am a creditor of the late Firm of Arbuthnot & Co., entitled to the sum of Rs. 18,500 and odd.

2. I have filed an affidavit in the form prescribed under rule 44 of the Insolvency Rules with the Official Assignee.

3. That the Official Assignee has made an application to this Honourable Court for an order permitting him to arrange with the Bank of Madras that the Bank shall take a lien over the jute as and when it is delivered to him and make advances against it to the extent of 85 per cent. of the value of jute delivered to their keeping with a view to keep going the Chittavalasa Jute Factory, one of the business of the said Industrials, Ltd.

4. That I am informed and believe the same to be true that the late Firm of Arbuthnot & Co., owned a great portion of the shares of the said

Company and that they constitute one of the few valuable assests of the said Firm to meet the claims of the creditors.

5. That it was stated by the present Commissioner in Insolvency, the Hon. Mr Justice Boddam, on Tuesday, the 4th December 1906, that the said Commissioner was the holder of certain Preference shares in the said Arbuthnot's Industrials, Limited.

6. That, as a creditor of Arbuthnot and Company, I am anxious that the assets of the Company should not be frittered away in further useless attempts to carry on any business which is not likely to result in any advantage to myself and the other creditors.

7. That I believe it is the interest of the Preference shareholders in the said Arbuthnot Industrials Ltd., to have advances made by the Official Assignee to ensure to them the value of their shares and that His Lordship being himself a Preference shareholder is in law interested in granting the application, though as a Judge of the highest Court in the land, he may, as a matter of fact, be in no way influenced by this circumstance.

8. That I am opposed to any further expenditure upon the Arbuthnot's Industrials by the Official Assignee out of the funds available for distribution amongst creditors.

On Friday the 14th December the official Assignee renewed his application before Justice Sir. S. Subramania Iyer sitting as Insolvency Commissioner. After hearing the Official Assignee explain his position and also Mr. V. Krishnaswamy Iyer and Mr. C. V. Swaminathaiyar. His Lordship passed an order an the orising the official Assignee to borrow a sum not exceeding Rs. 50,000 from the Bank, giving his bermission to apply again to Court, after giving 24 hours, notice to creditors through the newspapers, if he wanted to borrow more.

---

## அர்பத்நட் இன்ஸால்வென்ஸி.

சென்னையில் பாங்கி வைத்து பாப்பர்களாய்ப் போய்விட்ட அர்பத்நட் கம்பெனியின் சொத்துகளெல்லாம் அபிஷியல் அஸைனீவசம் ஒப்புவிக்கப்பட்டு அவருடைய மாரீபத்தில் இருந்து வருவது எல்லாருக்கும் தெரிந்த விஷயம். நானதுமாதம் 4-ந் தேதியன்று அவர்கள் கேஸ் விசாரணைக்கு வந்தபொழுது கடன்காரர்கள் ஜாப்தாவும், சொத்து விவரமும் தயாராகவில்லையென்று ஜனவரிமாதம் 5-ந்தேதி வரையில் வாயிதா கேட்டார்கள். அந்தப்படி ஜட்ஜி போடம் இன்ஸால்வென்ஸி கமிஷனாக விருந்து தவணை கொடுத்தபின் அபிஷியல் அஸைனியாகிய மிஸ்டர் ரீட் "அர்பத்நட் இண்டஸ்ட்ரியல்ஸ்" என்னும் தொழிற்சாலைகளில் ஒன்றாகிய கோணி நெசவு யந்திரசாலைக்கு சணல் வாங்கிக்கொடுத்து சரக்காகச்செய்து முடிந்திருப்பதால், அதை மதிராஸ் பாங்கியாரிடம் அடைமானம் வைத்து 100-க்கு 85 விகிதம் கடன்வாங்கக் கோர்ட்டார் அனுமதி வேண்டுமென்று விண்ணப்பம் செய்துகொண்டார். அப்பொழுது அது விஷயமாய்க் கடன்காரர்களுக்கு நோட்டீஸ் கொடுக்கவேண்டுமென்று மிஸ்டர் பார்ட்டன் சில கடன்காரர்களுக்காகக் கேட்க, அவர்களுக்கு நோட்டீஸ் கொடுத்தபின் விண்ணப்பம் செய்து கொள்வதாக அம்மனுவைத் தள்ளிவைத்துக் கொண்டார். அந்தப்படி நோட்டீஸ் கொடுத்ததின் பேரில் "விவேக சிந்தாமணி" எட்டிடர் மிஸ்டர் ஸி. வி. ஸ்வாமிநாதய்யர் அவர்கள் மிஸ்டர் போடம் மேற்படித் தொழிற்சாலைகளில் முன்பாத்தியமுள்ள கடன்காரர்களில் ஒருவராக விருப்பதால், அவருடைய பாத்தியதையும், சாதாரண கடன் காரர்களுடைய பாத்தியதையும் ஒன்றுக்கொன்று எதிரிடையாக விருத்தலால், அவ்வித பாத்தியதையுள்ள ஜட்ஜி இந்தக்கேஸை விசாரணை செய்யக்கூடாதென்று ஆக்ஷேபித்து வாக்குமூலம் கொடுக்க, இன்று காலமே மிஸ்டர் ஜஸ்டிஸ்போடாம் கோர்ட்டுக்குவந்ததும் மிஸ்டர் ரீட் முன்போல மனுபண்ணிக்கொண்டு மிஸ்டர் ஸி. வி. ஸ்வாமிநாதய்யர் அதற்கு ஆக்ஷேபித்து, அவர் இந்த மனுவை விசாரிக்கக்கூடாதென்று வாக்குமூலம் கொடுத்திருப்பதாகச் சொல்ல,—

ஜட்ஜி போடம்—இதுவரையில் வேறும் நடவடிக்கை மனுக்கள்மட்டும் வந்தன. நான் விசாரித்து நடத்தினேன். இனிவரும் மனுக்கள் ஆக்ஷேபிக்கக்கூடியதா யிருப்பதால், கடன்காரர்கள் யாராவது ஆக்ஷேபிக்கிறதா யிருந்தால் நான் இந்த மனுவை விசாரிக்க இஷ்டப்படவில்லை யென்றார்.

மிஸ்டர் ரீட்:—(மிஸ்டர் ஸி. வி. ஸ்வாமிநாதய்யரை சுட்டிக்காட்டி) இவர் ஒரு கடன்காரர். இதற்கு ஆக்ஷேபனை செய்து வாக்குமூலம் கொடுத்திருக்கிறார் என்று அறிகிறேன்.

ஜட்ஜி போடம்:—ஆக்ஷேபிக்கிற விஷயத்தில் எனக்கு விசாரிக்க இஷ்டமில்லை யென்றார்.

மிஸ்டர் ரீட்:—ஜட்ஜி பிரபு அவர்களுக்கு இதை விசாரிக்க மனமில்லை யானால், நான் வேறு கோர்ட்டில் போய் மனு செய்து கொள்கிறேன்.

ஜட்ஜி போடம் அப்படியே செய்யுமென்று சொல்ல, அம்மனு அவர் முன் விசாரணைக்கு வராமல் விட்டு விடலாய்விட்டது.

இனிமேல் இந்த அர்பத்நட் இன்ஸால்வென்ஸிக் கேஸ் வேறொருஜட்ஜ் இன்ஸால்வென்ஸிக் கமிஷனாக நியமிக்கப்பட்டபின் அவர்முன் விசாரணைக்குவரும் இந்தப்பொறுப்பு கனம் சீப் ஜஸ்டிஸ் அவர்களைச் சேர்ந்தது. கனம் ஜஸ்டிஸ் சுப்பிரமணிய ஐயரைத்தவிர மற்ற எல்லா ஹைகோர்ட்டு ஜட்ஜிகளும் அர்பத்நட் கம்பெனியில் பணம் போட்டு இழந்திருக்கிறார்கள்.

14உ வெள்ளிக்கிழமை காலை 11-மணிக்கு அபிஷியல் அஸைனி மிஸ்டர் ரீட் அவர்கள் கனம் ஜட்ஜ் சுப்பிரமணிஐயர் அவர்கள் இன்ஸால்வென்ஸி கமிஷனராக வீற்றிருக்க மறுபடியும் மனுச்செய்து கொண்டார். அப்பொழுது ஜட்ஜியவர்கள் மிஸ்டர் ரீட் சொன்னதையும், மிஸ்டர் வி. கிர்ஷ்ணஸ்வாமி ஐயர், மிஸ்டர் ஸி. வி. ஸ்வாமிநாதய்யர் இவர்கள் சொன்னவற்றையும் கேட்டு, கடைசியில் 50,000 ரூபாய் கடன்வாங்க உத்தரவு கொடுத்தார். இன்னும் பணம் வேண்டுமானால் கடன்காரர்களுக்கு பேபர்மூலமாய் நோட்டீஸ் கொடுத்துவிட்டு மனுப்பண்ணிக்கொள்ளச் சொன்னார்.

## * "HAIL MOTHER! I TAKE REFUGE IN THEE!"

## தஞ்சமென்றடைந்தேன் தாயே வந்தனம்!

i

தாயே, மாதேவி! தஞ்சமோ தஞ்சம்! அஞ்சேலென்றுன் றேடற்றருணின்சேயை!
நாயேனின்பொன் னடிவிட்டோடியே அலைந்துதிரிந்து நலிந்துமெலிந்தேன்!
வாயேனெற்கு ஆ! வெறியேனின்சேய்விம்பதூண்டு பாம்பதுபோல நெளிந்தேன்புவிமிசை!
தாயெநொந்தேன்! தாங்கேனினிப்பாரம்! தூக்கொணாத்துயர்ச்சுமை தூக்கிநான்னைந்தேன்!
(CHORUS கணகதம்) தஞ்சந்தஞ்சந்தாயேகாத்தருள்அஞ்சலேன்றுன்சேயை அரவணைத்தே!

ii

வர்மம்வேண்டாம் தாயேகாத்தருள் நின்னடிபிரியா தென்னையணைத்தே!
கர்மவினைசூழக் காசினிமுழுவதுங் கெட்டலைந்துலைந்தது போதும்போதும்!
வர்மந்தானெத்தனை! வாதுகளெத்தனை! சூதுகணிறைந்த சுனைவழியெத்தனை!
தர்மங்கலைகிழாத் தவறிவிழுந்திடக் கர்மவலைப்பட்டுக் கருத்தழிந்தயர்ந்தனன்!
(CHORUS கணகதம்) உள்ளமுணர்ந்தேயின்னருள்சாதித்துக் காத்தருள்தாயே நின்சேயை!

iii

யாரொடுநோவே னார்க்கெடுத்துரைப்பனுன் பட்டதோர்பாடெலாம் பார்த்திருந்தாய்!
யாரொடுசேர்த்தியா ரெனக்குற்றார்! உனையலாதெனக்கொரு கதிதானிலைகண்டாய்!
சீரொடுபொலிவாய்ச் செம்மைநலந்தரும் நினையலாதொருவரைத் தொழுதியான்துதிப்பே
[னோசொல்லாய்!
வேரொடுமும்பலக் களையறுக்தாண்டிடு மன்னையேநின்னடி தஞ்சமென்றடைந்தேனே!
(CHORUS கணகதம்) உள்ளமறிந்துன்திருவடிசூட்டிக்காத்தருள்தாயேநின்சேயை!

iv

நின்னடிசந்தனை யென்சலிதீர்த்தனை நினையன்றியானென்ப தில்லாதியற்றினை
பொன்னடிநீழலிற் பிணைத்தெனையிருத்திக் கணத்தினிற்பெந்தக் கயிற்றினையறுத்தனை
நின்னடிசேர்ந்தயான் பொன்னடிதொழுதுமுன்னைமுடிச்சுகளவிழ்தொறும்பாடுவன்
என்னடிசோரா துன்னடிதந்தது மென்வினைதீர்ந்தது! நின்னடிதொழுவனுன்!
(CHORUS கணகதம்) எல்லாவுயிர்களினுள்ளத்துறையும்உனையறிந்துரைசெயு மாறுணர்த்தே!

v

போற்றுவனின்னடி புகழுவனின்பதம் வேற்றுமைதோற்றம் வேறிலையெனக்கினி!
ஊற்றுநீர்சுரக்குமா றுள்ளெழுந்தூறியூறிக் கூற்றுவனொழிந்திடக் குதூஹலம்விளைத்தனை!
போற்றுவனுன்னையுரன் போதப்பெருக்கினுற் புள்ளினங்கள்ளிருடரப் பாடுமாபோல்!
ஆற்றுநீரோடியோடி யலைகடல்சேர்ந்துகூடிக் காற்றதுசலனந்திரக் கரைதிரையற்றவாறே!
(CHORUS கணகதம்) நின்னருள்போற்றியேற்றி நின்மலன்றனேயாகிநிறைவெளி யடைவனின்சேய்!

vi

அருளினி லிருந்திருந் தருள்முதிர்ந் ததிர்ந்தபோது
மருளினைப் போக்கியென்றன் மயலெலாந் தீர்த்தவென்தாய்!
தெருளினில் வளர்த்தவன்றன் தெள்ளமுதுண்டநற்சேய்
இருளெலாங் காண்டியுன்னோ டருள்வெளிக்கப்பாலுள்ள—
(CHORUS கணகதம்) அத்தனோடைக்கியமாகச் செய்வதுன் கடமையன்றோ!
தாயே வந்தனம்! தயாநிதே வந்தனம்! சோதியேவந்தனம். சொல்மதியே!.

(ஓம்தத்ஸத்.)

* For the original English of which this is a Tamil Version see the Extract from Edward Carpenter's "TOWARDS DEMOCRACY" in the VIVEKACHINTAMANI for December 1905, from which this whole piece, as representing the general sentiment and public feeling at present, is again reproduced.